உ

# நல்லூர்ப் புராணம்.

இது,

தும்பகோணம் கவர்ன்மேன்ட் காலேஜ் தமிழ்ப்பண்டிதர்

திருவல்லிக்கேணி

வைத்தமாநிதி-முடும்பை-

சடகோபராமாநுஜாசாரியரால்

பல கையெழுத்துப்பிரதிகளைக்கொண்டு

பரிசோதிக்கப்பட்டு,

நல்லூர்

கல்யாணசுந்தரசாஸ்திரியால்

கும்பகோணம்

சாரதாவிலாஸ அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பெற்றது.

பிலவங்கஞு பங்குனிமீ

1908.

விலை ரூ. க.

# சருக்கங்களின் பெயரும், திருவிருத்தத் தொகையும்.



உ

சிவமயம்.

# திருநல்லூர்த்
# தேவாரத் திருப்பதிகங்கள்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

### முதல் திருமுறை.

பண்-குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

கொட்டும்பறைசீராற்குழுமவனலேந்தி
நட்டம்பயின்றாடுநல்லூர்ப்பெருமானை
முட்டின்றிருபோதுமுனியாதெழுந்தன்பு
பட்டமனத்தார்களறியார்பாவமே. (௧)

ஏறிலெருதேறுமெழிலாயிழையோடும்
வேறும்முடனுமாம்விகிர்தரவரென்ன
நாறும்மலர்ப்பொய்கைநல்லூர்ப்பெருமானைக்
கூறும்மடியார்கட்கடையாகுற்றமே. (௨)

சூடுமிளந்திங்கட்சுடர்பொற்சடைதாழ
வோடுண்கலனாகவூரூரிடுபிச்சை
நாடுந்நெறியானைநல்லூர்ப்பெருமானைப்
பாடும்மடியார்கட்கடையாபாவமே. (௩)

நீத்தநெறியானைநீங்காத்தவத்தானை
நாத்தநெறியானைநல்லூர்ப்பெருமானைக்
காத்தநெறியானைக்கைகூப்பித்தொழு
தேத்துமடியார்கட்கில்லையிடர்தானே. (௪)

ஆகத்துமைகேள்வனரவச்சடைதாழ
நாகமசைத்தானைநல்லூர்ப்பெருமானைத்
தாகம்புகுந்தண்மித்தாள்கடொழுந்தொண்டர்
போகமனத்தராய்ப்புகழத்திரிவாரே. (௫)

கொல்லுங்களியானையுரிபோர்த்துமையஞ்ச
நல்லநெறியானைநல்லூர்ப்பெருமானைச்
செல்லுநெறியானைச்சேர்ந்தாரிடர்தீரச்
சொல்லுமடியார்களறியார்துக்கமே. (சு)

எங்கள்பெருமானையிமையோர்தொழுதேத்து
நங்கள்பெருமானைநல்லூர்பிரிவில்லா
தங்கைதலைக்கேற்றியாளென்றடிநீழற்
றங்குமனத்தார்கடடுமாற்றறுப்பாரே. (எ)

காமனெழில்வாட்டிக்கடல்சூழிலங்கைக்கோ
னாமமிறுத்தானைநல்லூர்ப்பெருமானை
யேமமனத்தராயிகழாதெழுந்தொண்டர்
தீமனத்தார்களறியார்தீயவே. (அ)

வண்ணமலரானும்வையமளந்தானு
நண்ணலரியானைநல்லூர்ப்பெருமானைத்
தண்ணமலர்தூவித்தாள்கடொழுதேத்த
வெண்ணுமடியார்கட்கில்லையிடுக்கணே. (கூ)

பிச்சக்குடைநீழற்சமணர்சாக்கியர்
நிச்சமலர்தூற்றநின்றபெருமானை
நச்சுமிடற்றானைநல்லூர்ப்பெருமானை
யெச்சுமடியார்கட்கில்லையிடர்தானே. (கO)

தண்ணம்புனற்காழிஞானசம்பந்த
னண்ணும்புனல்வேலிநல்லூர்ப்பெருமானை
வண்ணம்புனைமாலைவைகலேத்துவார்
விண்ணுநிலனுமாய்விளங்கும்புகழாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## இரண்டாந் திருமுறை.

### பண்-காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பெண்ணமருந்திருமேனியுடையீர்பிறங்குசடைதாழப்
பண்ணமருநான்மறையேபாடியாடல்பயில்கின்றீர்
திண்ணமரும்பைம்பொழிலும்வயலுஞ்சூழ்ந்ததிருநல்லூர்
மண்ணமருங்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (க)

அலைமல்குதண்புனலும்பிறையுஞ்சூடியங்கையிற்
கொலைமல்குவெண்மழுவுமனலுமேந்துங்கொள்கையீர்
சிலைமல்குவெங்கணையாற்புரமூன்றெரித்தீர்திருநல்லூர்
மலைமல்குகோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (௨)

குறைநிரம்பாவெண்மதியஞ்சூடிக்குளிர்புன்சடைதாழப்
பறைநவின்றபாடலோடாடல்பேணிப்பயில்கின்றீர்
சிறைநவின்றதண்புனலும்வயலுஞ்சூழ்ந்ததிருநல்லூர்
மறைநவின்றகோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (௩)

கூனமரும்வெண்பிறையும்புனலுஞ்சூடுங்கொள்கையீர்
மானமருமென்விழியாள்பாகமாகுமாண்பினீர்
தேனமரும்பைம்பொழிலின்வண்டுபாடுந்திருநல்லூர்
வானமருங்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (௪)

நிணங்கவருமூவிலையுமனலுமேந்திநெறிகுழலா
ளணங்கமரும்பாடலோடாடன்மேவுமழகினீர்
திணங்கவருமாடரவும்பிறையுஞ்சூடித்திருநல்லூர்
மணங்கமழுங்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (௫)

கார்மருவுபூங்கொன்றைசூடிக்கமழ்புன்சடைதாழ
வார்மருவுமென்முலையாள்பாகமாகுமாண்பினீர்
தேர்மருவுநெடுவீதிக்கொடிகளாடுந்திருநல்லூ
ரேர்மருவுகோயிலேகோயிலாகவிருந்தீரே. (௬)

ஊன்றோயும்வெண்மழுவுமனலுமேந்தியுமைகாண
மீன்றோயுந்திசைநிறையவோங்கியாடும்வேடத்தீர்
தேன்றோயும்பைம்பொழிலின்வண்டுபாடுந்திருநல்லூர்
வான்றோயுங்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (௭)

காதமரும்வெண்குழையீர்கறுத்தவரக்கன்மலையெடுப்ப
மாதமருமென்மொழியாண்மறுகும்வண்ணங்கண்டுகந்தீர்
தீதமராவந்தணர்கள்பரவியேத்துந்திருநல்லூர்
மாதமருங்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (௮)

போதின்மேலயன்றிருமால்போற்றியும்மைக்காணாது
நாதனேயிவனென்றுநயந்தேத்தமகிழ்ந்தளித்தீர்
தீதிலாவந்தணர்கடீமூன்றோம்புந்திருநல்லூர்
மாதராளவளோடுமன்னுகோயின்மகிழ்ந்தீரே. (௯)

பொல்லாதசமணரொடுபுறங்கூறுஞ்சாக்கியரொன்
றல்லாதாரறவுரைவிட்டடியார்கள்போற்றேவா
நல்லார்களந்தணர்களுளுநேமேத்துந்திருநல்லூர்
மல்லார்ந்தகோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. (க0)

கொந்தணவும்பொழில்புடைசூழ்கொச்சைமேவுகுலவேந்தன்
செந்தமிழின்சம்பந்தன்சிறைவண்புனல்சூழ்திருநல்லூர்ப்
பந்தணவுமெல்விரலாள்பங்கன்றன்னைப்பயில்பாடல்
சிந்தனையாலுரைசெய்வார்சிவலோகஞ்சேர்ந்திருப்பாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## மூன்றாந் திருமுறை.

### திருவிராகம். பண்-சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

வண்டிரியவிண்டமலர்மல்குசடைதாழவிடையேறிப்
பண்டெரிகைகொண்டபரமன்பதியதென்பரதனயலே
நண்டிரியநாரையிரைதேரவரைமேலருவிமுத்தந்
தெண்டிரைகண்மோதவிரிபோதுகமழுந்திருநலூரே. (க)

பல்வளருநாகமரையார்த்துவரைமங்கையொருபாக
மல்வளர்புயத்திலணைவித்துமகிழும்பரமனிடமாஞ்
சொல்வளரிசைக்கிளவிபாடிமடவார்நடமதாடச்
செல்வமறையோர்கண்முறையேத்தவளருந்திருநலூரே. (உ)

நீடுவரைமேருவிலதாகநிகழ்நாகமழலம்பாற்
கூடலர்கண்மூவெயிலெரித்தகுழகன்குலவுசடைமே
லேடுலவுகொன்றைபுனனின்றுதிகழுந்நிமலனிடமாஞ்
சேடுலவுதாமரைகணீடுவயலார்திருநலூரே. (ங)

கருகுபுரிமிடறர்கரிகாடரெரிகையதனிலேந்தி
யருகுவருகரியினுரியதளர்படவரவரிடம்வினவின்
முருகுவிரிபொழிலின்மணநாறமயிலாலமரமேறித்
திருகுசினமந்திகனிசிந்தமதுவார்திருநலூரே. (ச)

பொடிகொடிருமார்பர்புரிநூலர்புனல்பொங்கரவுதங்கு
முடிகொள்சடைதாழவிடையேறுமுதலாளரவரிடமா
மிடிகொண்முழவோசையெழிலார்செய்தொழிலாளர்விழமல்கச்
செடிகொள்வினையகலமனமினியவர்கள்சேர்திருநலூரே. (ரு)

புற்றரவர்நெற்றியொர்கண்ணேற்றைவிடையூர்வரடையாளஞ்
சுற்றமிருள்பற்றியபல்பூதமிசைபாடநசையாலே
கற்றமறையுற்றுணர்வர்பற்றலர்கண்முற்றுமெயின்மாளச்
செற்றவரிருப்பிடநெருக்குபுனலார்திருநல்லூரே. (௬)

பொங்கரவரங்கமுடன்மேலணிவர்ஞாலமிடுபிச்சை
தங்கரவமாகவுழிதந்துமெய்துலங்கியவெணீற்றர்
கங்கையரவம்விரவுதிங்கள்சடையடிகளிடம்வினவிற்
செங்கயல்வதிக்குதிகொளும்புனலதார்திருநல்லூரே. (௭)

ஏறுபுகழ்பெற்றதெனிலங்கையவர்கோனையருவரையிற்
சீறியவனுக்கருளுமெங்கள்சிவலோகனிடமாகுங்
கூறுமடியார்களிசைபாடிவலம்வந்தயருமருவிச்
சேறுகமரானவழியத்திகழ்தருந்திருநல்லூரே. (௮)

மாலுமலர்மேலயனுநேடியறியாமையெரியாய
கோலமுடையானுணர்வுகோதில்புகழானிடமதாகு
நாலுமறையங்கமுதலாறுமெரிமூன்றுதழலோம்புஞ்
சீலமுடையார்கணெடுமாடம்வளருந்திருநல்லூரே. (௯)

கீறுமுடைகோவணமிலாமையிலோவியதவத்தர்
பாறுமுடன்மூடுதுவராடையர்கள்வேடமவைபாரே
லேறுமடவாளொடினிதேறிமுனிருந்தவிடமென்பர்
தேறுமனவாரமுடையார்குடிசெயுந்திருநல்லூரே. (௧௦)

திரைகளிருகரையும்வருபொன்னிநிலவுந்திருநல்லூர்மேற்
பரசுதருபாணியைநலந்திகழ்செய்தோணிபுரநாத
னுரைசெய்தமிழ்ஞானசம்பந்தனிசைமாலைமொழிவார்போய்
விரைசெய்மலர்தூவவிதிபேணுகதிபேறுபெறுவாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசு நாயனார்.

நான்காந்திருமுறை.

திருவிருத்தம். பண்-கொல்லி

திருச்சிற்றம்பலம்.

அட்டுமினில்பலியென்றென்றகங்கடைதோறும்வந்து
மட்டவிழுங்குழலார்வளைகொள்ளும்வகையென்கொலோ
கொட்டியப்பாணியெடுத்திட்டபாதமுங்கோளரவு
நட்டநின்றாடியநாதர்நல்லூரிடங்கொண்டவரே. (௧)

பெண்ணிட்டம்பண்டையதன்றிவைபெய்பலிக்கென்றுழல்வார்
நண்ணிட்டுவந்துமனைபுகுந்தாருநல்லூரகத்தே
பண்ணிட்டபாடலராடலராய்ப்பற்றிநோக்கிநின்று
கண்ணிட்டுப்போயிற்றுக்காரணமுண்டுகறைக்கண்டரே. (௨)

படவேரரவல்குற்பாவைநல்லீர்பகலேயொருவ
ரிடுவாரிடைப்பலிகொள்பவர்போலவந்தில்புகுந்து
நடவாரடிகணடம்பயின்றாடியகூத்தர்கொலோ
வடபாற்கயிலையுந்தென்பானல்லூருந்தம்வாழ்பதியே. (௩)

செஞ்சுடர்ச்சோதிப்பவளத்திரடிகழ்முத்தனைய
நஞ்சணிகண்டனல்லூருறைநம்பனைநானொருகாற்
றுஞ்சிடைக்கண்டுகனவின்றலைத்தொழுதேற்கவன்று
னெஞ்சிடைநின்றகலான்பலகாலமுநின்றனனே. (௪)

வெண்மதிசூடிவிளங்கிநின்றானைவிண்ணோர்கடொழ
நண்ணிலயத்தொடுபாடலறாதநல்லூரகத்தே
திண்ணிலயங்கொடுநின்றான்றிரிபுரமூன்றெரித்தான்
கண்ணுளுநெஞ்சத்தகத்துமுளகழற்சேவடியே. (௫)

தேற்றப்படத்திருநல்லூரகத்தேசிவனிருந்தாற்
றோற்றப்படச்சென்றுகண்டுகொள்ளார்தொண்டர்துன்மதியா
லாற்றிற்கெடுத்துக்குளத்தினிற்றேடியவாதரைப்போற்
காற்றிற்கெடுத்துலகெல்லாந்திரிதர்வர்காண்பதற்கே. (௬)

நாட்கொண்டதாமரைப்பூந்தடஞ்சூழ்ந்தநல்லூரகத்தே
கீட்கொண்டகோவணங்காவென்றுசொல்லிக்கிறிபடத்தான்
வாட்கொண்டநோக்கிமனைவியொடுமங்கொர்வாணிகனை
யாட்கொண்டவார்த்தையுரைக்குமன்றோவிவ்வகலிடமே. (௭)

அறைமல்குபைங்கழலார்க்கநின்றானணிபார்சடைமே
னறைமல்குகொன்றையந்தாருடையானுநல்லூரகத்தே
பறைமல்குபாடலனாடலனாகிப்பரிசழித்தான்
பிறைமல்குசெஞ்சடைதாழநின்றாடியபிஞ்ஞகனே. (௮)

மன்னியமாமறையோர்மகிழ்ந்தேத்தமருவியெங்குந்
துன்னியதொண்டர்களின்னிசைபாடித்தொழுநல்லூர்க்
கன்னியர்தாமுங்கனவிடையுன்னியகாதலரை
யன்னியரற்றவரங்கணனேயருணல்கென்பரே. (௯)

திருவமர்தாமரைசீர்வளர்செங்கழுநீர்கொணெய்தல்
குருவமர்கோங்கங்குராமகிழ்சண்பகங்கொன்றைவன்னி
மருவமர்நீள்கொடிமாடமலிமறையோர்கணல்லூ
ருருவமர்பாகத்துமையவள்பாகனையுள்குதுமே. (கo)

செல்லேர்கொடியன்சிவன்பெருங்கோயில்சிவபுரமும்
வல்லேன்புகவுமதில்சூழிலங்கையர்காவலனைக்
கல்லார்முடியொடுதோளிறச்செற்றகழலடியா
னல்லூரிருந்தபிரானல்லனோநம்மையாள்பவனே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

ஆறாந் திருமுறை.
திருத் தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

நினைந்துருகுமடியாரைநையவைத்தார்
நில்லாமேதீவினைகணீங்கவைத்தார்
சினந்திருகுகளிற்றுரிவைப்போர்வைவைத்தார்
செழுமதியின்றளிர்வைத்தார்சிறந்துவானோ
ரினந்துருவிமணிமகுடத்தேறத்துற்ற
வினமலர்கள்போதவிழ்ந்துமதுவாய்பில்கி
நனைந்தனையதிருவடியென்றலைமேல்வைத்தார்
நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (க)

பொன்னலத்தநறுங்கொன்றைசடைமேல்வைத்தார்
புலியுரியினதள்வைத்தார்புனலும்வைத்தார்
மன்னலத்ததிரடோண்மேன்மழுவாள்வைத்தார்
வார்காதிற்குழைவைத்தார்மதியம்வைத்தார்
மின்னலத்தநுண்ணிடையாள்பாகம்வைத்தார்
வேழத்தினுரிவைத்தார்வெண்ணூல்வைத்தார்
நன்னலத்ததிருவடியென்றலைமேல்வைத்தார்
நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (உ)

தோடேறுமலர்க்கொன்றைசடைமேல்வைத்தார்
துன்னெருக்கின்வடம்வைத்தார்துவலைசிந்தப்
பாடேறுபடுதிரைகளெறியவைத்தார்
பனிமத்தமலர்வைத்தார்பாம்பும்வைத்தார்

சேடேறு திருநுதன்மேனாட்டம்வைத்தார்
சிலைவைத்தார்மலைபெற்றமகளைவைத்தார்
நாடேறு திருவடியென்றலைமேல்வைத்தார்
நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (௫)

வில்லருளிவருபுருவத்தொருத்திபாகம்
பொருத்தாகிவிரிசடைமேலருவிவைத்தார்
கல்லருளிவரிசிலையாவைத்தாரூராக்
கயிலாயமலைவைத்தார்கடலூர்வைத்தார்
சொல்லருளியறநால்வர்க்கழியவைத்தார்
சுடுசுடலைப்பொடிவைத்தார்துறவிவைத்தார்
நல்லருளாற்றிருவடியென்றலைமேல்வைத்தார்
நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (௬)

விண்ணிரியுந்திரிபுரங்களெரியவைத்தார்
வினைதொழுவார்க்கறவைத்தார்துறவிவைத்தார்
கண்ணெரியாற்காமனையும்பொடியாவைத்தார்
கடிக்கமலமலர்வைத்தார்கயிலைவைத்தார்
திண்ணெரியுந்தண்புனலுமுடனேவைத்தார்
திசைதொழுதுமிசையமரர்திகழ்ந்துவாழ்த்தி
நண்ணரியதிருவடியென்றலைமேல்வைத்தார்
நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (௭)

உற்றுலவுபிணியுலகத்தெழுமைவைத்தா
ருயிர்வைத்தாருயிர்செல்லுங்கதிகள்வைத்தார்
மற்றமரர்கணம்வைத்தாரமரர்காணா
மறைவைத்தார்குறைமதியம்வளரவைத்தார்
செற்றமலியார்வமொடுகாமலோபஞ்
சிறவாதநெறிவைத்தார்துறவிவைத்தார்
நற்றவர்சேர்திருவடியென்றலைமேல்வைத்தார்
நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (அ)

மாறுமலைந்தாரரணமெரியவைத்தார்
மணிமுடிமேலரவைத்தாரணிகொண்மேனி
நீறுமலிந்தெரியாடனிலவவைத்தார்
நெற்றிமேற்கண்வைத்தார்நிலயம்வைத்தா

ஆறுமலிந்தறுதிரைகளெறியவைத்தா
ரார்வத்தாலடியமரர்பரவவைத்தார்
நாறுமலர்த்திருவடியென்றலைமேல்வைத்தார்
நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (எ)

குலங்கண்மிகுமலைகடல்கண்ஞாலம்வைத்தார்
குருமணிசேரரவைத்தார்கோலம்வைத்தா
ருலங்கிளருமரவத்தினுச்சிவைத்தா
ருண்டருளிவிடம்வைத்தாரெண்டோள்வைத்தார்
நிலங்கிளரும்புனல்கனலுளனிலம்வைத்தார்
நிமிர்விசும்பின்மிசைவைத்தார்நினைந்தாரிந்நா
ணலங்கிளருந்திருவடியென்றலைமேல்வைத்தார்
நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (அ)

சென்றுருளுங்கதிரிரண்டும்விசும்பில்வைத்தார்
திசைபத்துமிருநிலத்திற்றிருந்தவைத்தார்
நின்றருளியடியமரர்வணங்கவைத்தார்
நிறைதவமுமறைப்பொருளுநிலவவைத்தார்
கொன்றருளிக்கொடுங்கூற்றநடுங்கியோடக்
குரைகழற்சேவடிவைத்தார்விடையும்வைத்தார்
நன்றருளுந்திருவடியென்றலைமேல்வைத்தார்
நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (கூ)

பாம்புரிஞ்சிமதிகிடந்துதிரைகளேங்கப்
பணிக்கொன்றைசடைவைத்தார்பணிசெய்வானோ
ராம்பரிசுதமக்கெல்லாமருளும்வைத்தா
ரடுசுடலைப்பொடிவைத்தாரழகும்வைத்தா
ரோம்பரியவல்வினைநோய்தீரவைத்தா
ருமையையொருபால்வைத்தாருகந்துவானோ
ராம்பரவுந்திருவடியென்றலைமேல்வைத்தார்
நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (க0)

குலங்கிளரும்வருதிரைகளேழும்வைத்தார்
குருமணிசேர்மலைவைத்தார்மலையைக்கையா
லுலங்கிளரவெடுத்தவன்றோண்முடியுநோவ
வொருவிரலாலுறவைத்தாரிறைவாவென்று

பூலம்புதலுமருளொடுபோர்வாளும்வைத்தார்
புகழ்வைத்தார்புரிந்தாளாக்கொள்ளவைத்தார்
நலங்கிளருந்திருவடியென்றலைமேல்வைத்தார்
நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (கக)

திருச்சிற்றம்பலம்.

ஆ திருநல்லூர்த்திருப்பதிகம் ரு-க்குத் திருவிருத்தம்-ருரு.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

இரண்டாந் திருமுறை.

திருக்ஷேத்திரக்கோவை.

மனவஞ்சர்மற்றோடமுன்மாதராரு
மதிகூர்திருக்கூடலிலாலவாயு
மினவஞ்சொலிலாவிடைமாமருது
மிரும்பைப்பதிமாகாளம்வெற்றியூருங்
கனமஞ்சினமால்விடையான்விரும்புங்
கருகாவூர்நல்லூர்பெரும்புலியூர்
தனமென்சொலிற்றஞ்சமென்றேநினைமின்
றவமாமலமாயினதீர்னறுமே. (கூ)

## திருநாவுக்கரசுநாயனார்.

ஆறாந் திருமுறை.

திருப்பள்ளியின்முக்கூடல்-திருத்தாண்டகம்.

நதியாருஞ்சடையானைநல்லூரானை
நள்ளாற்றின்மேயானைநல்லத்தானை
மதுவாரும்பொழில்புடைசூழ்வாய்மூரானை
மறைக்காடுமேயானையாக்கூரானை
நிதியாளன்றோழனைநீடூரானை
நெய்த்தானமேயானையாரூரென்னும்
பதியானைப்பள்ளியின்முக்கூடலானைப்
பயிலாதேபாழேநானுழன்றவாறே. (எ)

### க்ஷேத்திரக்கோவை—திருத்தாண்டகம்.

நறையூரிற்சித்தீச்சரநள்ளாறு
நாரையூர்நாகேச்சுரநல்லூர்நல்ல
துறையூர்சோற்றுத்துறைசூலமங்கை
தோணிபுரந்துருத்திசோமீச்சர
முறையூர்கடலொற்றியூரூற்றத்தூ
ரோமாம்புலியூரோரேடகத்துங்
கறையூர்கருப்பறியல்கன்றாப்பூருங்
கயிலாயநாதனையேகாணலாமே. (௧௦)

---

### திருவடைவு—திருத்தாண்டகம்.

பிறையூருஞ்சடைமுடியெம்பெருமானூர்
பெரும்பற்றப்புலியூரும்பேராவூரு
நறையூருநல்லூருநல்லாற்றூரு
நாலூருஞ்சேற்றூருநாரையூரு
முறையூருமோத்தூருமூற்றத்தூரு
மளப்பூரோமாம்புலியூரொற்றியூருந்
துறையூருந்துவையூருந்தோழூர்தானுந்
துடையூருந்தொழவிடர்கடொடராவன்றே. (௪)

---

## சுந்தரமூர்த்தி நாயனார்.

### ஏழாந் திருமுறை.

ஊர்த்தொகை. பண்- பழம்பஞ்சுரம்.

தாங்கூர்பிணிநின்னடியார்மேலவகலவருளாயே
வேங்கூருறைவாய்விளமர்நகராய்விடையார்கொடியானே
நாங்கூருறைவாய்தேங்கூர்நகராய்நல்லூர்நம்பானே
பாங்கூர்பலிதேர்பரனேபரமாபழனப்பதியானே. (௬)

---

# பெரியபுராணமெனவழங்கும்
# திருத்தொண்டர்புராணம்.

(பன்னிரண்டாந் திருமுறை.)

## * அமர்நீதிநாயனார்புராணம்.

முக்கணக்கராமுதல்வனாரவர்திருநல்லூர்
மிக்கசீர்வளர்திருவிழாவிருப்புடன்வணங்கித்
தக்கவன்பர்களமுதுசெய்திருமடஞ்சமைத்தார்
தொக்கசுற்றமுந்தாமும்வந்தணைந்தனர்தூயோர். (௪)

மருவுமன்பொடுவணங்கினர்மணிகண்டர்நல்லூர்த்
திருவிழாவணிசேவித்துத்திருமடத்தடியார்
பெருகுமின்பமோடமுதுசெய்திடவருள்பேணி
யுருகுசிந்தையின்மகிழ்ந்துறைநாளிடையொருநாள். (௫)

பிறைத்தளிர்ச்சடைப்பெருந்தகைபெருந்திருநல்லூர்க்
கறைக்களத்திறைகோவணப்பெருமைமுன்காட்டி
நிறைத்தவன்புடைத்தொண்டர்க்குநீடருள்கொடுப்பான்
மறைக்குலத்தொருபிரமசாரியின்வடிவாகி. (௬)

இழைத்தவன்பினிலிறைதிருநீற்றுமெய்யடிமை
பிழைத்திலோமெனிற்பெருந்துலைநேர்நிற்கவென்று
மழைத்தடம்பொழிற்றிருநல்லூரிறைவரைவணங்கித்
தழைத்தவஞ்செழுத்தோதினரேறினர்தட்டில். (௪௫)

அண்டர்பூமழைபொழியமற்றதனிடையொளித்த
முண்டவேதியரொருவழியான்முதனல்லூர்ப்
பண்டுதாம்பயில்கோலமேவிசும்பினிற்பாகங்
கொண்டபேதையுந்தாமுமாங்காட்சிமுன்கொடுத்தார். (௪௬)

---

* அமர்நீதிநாயனார் முத்திபெற்ற தினமாகிய ஆனிமாசத்துப் பூரநக்ஷத்திரத்தில் ஐதிகியத்தின்படி விசேஷ ஸம்பிரமத்துடன் திருநல்லூரில் மஹோத்ஸவம் நடைபெறுகின்றது.

## திருநாவுக்கரசுநாயனார்புராணம்.

சென்றுசேர்ந்துதிருச்சத்திமுற்றத்திருந்தசிவக்கொழுந்தைக்
குன்றமகடன்மனக்காதல்குலவும்பூசைகொண்டருளு
மென்றுமினியபெருமானையிறைஞ்சியியல்பிற்றிருப்பணிகண்
முன்றிலணைந்துசெய்துதமிழ்மொழிமாலைகளுஞ்சாத்துவார். (1)

கோவாய்முடுகியென்றெடுத்துக்கூற்றம்வந்துகுமைப்பதன்முன்
பூவாரடிகளென்றலைமேற்பொறித்துவைப்பாயெனப்புகன்று
நாவார்பதிகம்பாடுதலுநாதன்றானுநல்லூரில்
வாவாவென்றேயருள்செய்யவணங்கிமகிழ்ந்துவாகீசர். (ககச)

நன்மைபெருகருணெறியேவந்தணைந்துநல்லூரின்
மன்னுதிருத்தொண்டனார்வணங்கிமகிழ்ந்தெழும்பொழுதி
லுன்னுடையநினைப்பதனைமுடிக்கின்றோமென்றவர்தஞ்
சென்னிமிசைப்பாதமலர்சூட்டினான்சிவபெருமான். (ககரு)

நனைந்தனையதிருவடியென்றலைமேல்வைத்தாரென்று
புனைந்ததிருத்தாண்டகத்தாற்போற்றிசைத்துப்புனிதரரு
ணினைந்துருகிவிழுந்தெழுந்துநிறைந்துமலர்ந்தொழியாத
தனம்பெரிதும்பெற்றுவந்தவறியோன்போன்மனந்தழைத்தார். (1)

நாவுக்குமன்னர்திருநல்லூரினம்பர்பான்
மேவுற்றதிருப்பணிகண்மேவுறநாளுஞ்செய்து
பாவுற்றதமிழ்மாலைபலபாடிப்பணிந்தேத்தித்
தேவுற்றதிருத்தொண்டுசெய்தொழுகிச்செல்லுநாள். (ககஎ)

கருகாவூர்முதலாகக்கண்ணுதலோனமர்ந்தருளுந்
திருவாவூர்திருப்பாலைத்துறைபிறவுஞ்சென்றிறைஞ்சிப்
பெருகார்வத்திருத்தொண்டுசெய்துபெருந்திருநல்லூ
ரொருகாலும்பிரியாதேயுள்ளுருகிப்பணிகின்றார். (ககஅ)

சாலநாளங்கமர்ந்துதந்தலைமேற்றாள்வைத்த
வாலமார்மணிமிடற்றாரணிமலர்ச்சேவடிநினைந்து
சேலுலாம்புனற்பொன்னித்தென்கரையேறிச்சென்று
சோலைநீண்மணிமாடத்திருநல்லூர்குறுகினார். (உகரு)

அங்கணைந்துதம்பெருமானடிவணங்கியாராது
பொங்கியவன்பொடுதிளைத்துப்போற்றிசைத்துப்பணிசெயுநாட்
டங்குபெருங்காதலினாற்றாமரைமேல்விரிஞ்சனொடு
செங்கண்மாலறிவரியார்திருவாரூர்தொழநினைந்தார். (உஉஉ)

நல்லூரினம்பரருள்பெற்றுப்போய்ப்பழையாறைப்
பல்லூர்வெண்டலைக்கரத்தார்பயிலுமிடம்பலபணிந்து
சொல்லூர்வண்டமிழ்பாடிவலஞ்சுழியைத்தொழுதேத்தி
யல்லூர்வெண்பிறையணிந்தார்திருக்குடமூக்கணைந்திறைஞ்சி. (௧)

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்புராணம்.

காவின்மேன்முகிலெழுங்கமழ்நறும்புறவுபோய்
வாவிநீடலவன்வாழ்பெடையுடன்மலர்நறும்
பூவின்மேல்விழைவுறும்புகலியார்தலைவனார்
சேவின்மேலண்ணலார்திருநல்லூர்நண்ணினார். (௩௬௫)

மன்றலங்கமழ்பொழிற்றிருநல்லூர்மறையவலோர்
துன்றுமங்கலவினைத்துழனியாலெதிர்கொளப்
பொன்றயங்கொளிமணிச்சிவிகையிற்பொலிவுறச்
சென்றணைந்தருளினார்சிரபுரச்செம்மலார். (௩௬௬)

நித்திலச்சிவிகைமேனின்றிழிந்தருளியே
மொய்த்தவந்தணர்குழாமுன்செலப்பின்செலும்
பத்தரும்பரிசனங்களுமுடன்பரவவே
யத்தர்தங்கோபுரந்தொழுதணைந்தருளினார். (௩௬௭)

வெள்ளிமால்வரையைநேர்விரிசுடர்க்கோயிலைப்
பிள்ளையார்வலம்வரும்பொழுதினிற்பெருகுநீர்
வெள்ளவானந்தமெய்பொழியமேலேறிநீர்
துள்ளுவார்சடையரைத்தொழுதுமுன்பரவுவார். (௩௬௮)

பரவுசொற்பதிகமுன்பாடினார்பரிவுதான்
வரவயர்த்துருகுநேர்மனனுடன்புறமணைந்
தரவுடைச்சடையர்பேரருள்பெறும்பெருமையால்
விரவுமப்பதியமர்ந்தருளியேமேவினார். (௩௬௯)

அன்னதன்மையிலப்பதிதனிலமர்ந்தருளி
மின்னெடுஞ்சடைவிமலர்தாள்விருப்பொடுவணங்கிப்
பன்னுமின்னிசைப்பதிகமும்பலமுறைபாடி
நன்னெடுந்தனான்மறையவர்தொழநயந்தார். (௩௭௦)

நீடுமப்பதிநீங்குவார்நிகழ்திருநல்லூ
ராடுவார்திருவருள்பெறவகன்றுபோந்தங்கண்
மாடுமுள்ளனவணங்கியேபரவிவந்தணைந்தார்
தேடுமாலயற்கரியவர்திருக்கருகாவூர். (௩௭௧)

பணியுமப்பதிப்பசுபதீச்சரத்தினிதிருந்த
மணியையுள்புக்குவழிபடும்விருப்பினால்வணங்கித்
தணிவில்காதலிற்றண்டமிழ்மாலைகள்சாத்தி
யணிவிளங்கியதிருநல்லூர்மீண்டும்வந்தணைந்தார். (௩௭௭)

மறைவிளங்குமப்பதியினின்மணிகண்டர்பொற்று
ணிறையுமன்பொடுவணங்கியேநிகழ்பவர்நிலவும்
பிறையணிந்தவரருள்பெறப்பிரசமென்மலர்வண்
டறைநறும்பொழிற்றிருவலஞ்சுழியில்வந்தணைந்தார். (௩௭௮)

---

## ஏயர்கோன்கலிக்காமநாயனார்புராணம்.

### சுந்தரமூர்த்திநாயனார் சரித்திரம்.

அங்குநின்றுதிருக்குடமூக்கணைந்துபணிந்துபாடிப்போய்
மங்கைபாகர்வலஞ்சுழியைமருவிப்பெருகுமன்புருகத்
தங்குகாதலுடன்வணங்கித்தமிழாற்பரசியரசினுக்குத்
திங்கண்முடியாரடியளித்ததிருநல்லூரைச்சென்றணைந்தார். (௬௮)

நல்லூரிறைவர்கழல்போற்றிநவின்றுநடுவுநம்பர்பதி
யெல்லாமிறைஞ்சியேத்திப்போற்றிசையாற்பரவுந்தம்முடைய
சொல்லூதியமாவணிந்தவர்தஞ்சோற்றுத்துறையின்மருங்கெய்தி
யல்லூர்கண்டர்கோயிலினுள்ளடைந்துவலங்கொண்டடிபணிவார். ( )

---

## நம்பியாண்டார்நம்பியந்தாதியென்னுந்

## திருத்தொண்டர் திருவந்தாதி.

### அமர்நீதிநாயனார்.

மிண்டும்பொழிற்பழையாறையமர்நீதிவெண்பொடியின்
முண்டந்தரித்தபிராற்குநல்லூரின்முன்கோவணநேர்
கொண்டிங்கருளென்றுதன்பெருஞ்செல்வமுந்தன்னையுந்தன்
றுண்டமதிநுதலாளையுமீந்ததொழிலினனே. (௭)

### திருநாவுக்கரசுநாயனார்.

நற்றவனல்லூர்ச்சிவன்றிருப்பாதந்தன்சென்னிவைக்கப்
பெற்றவன்மற்றிப்பிறப்பறவீரட்டர்பெய்கீழற்று
ஞூற்றவனுற்றவிடமடையாரிடவொள்ளமுதாத்
துற்றவனாமூரினாவுக்கரசெனுந்தூமணியே. (உச)

---

## திருத்தொண்டர்புராணசாரம்.

### அமர்நீதிநாயனார்.

பழையாறைவணிகரமர்நீதியார்பாற்
பரவுசிறுமுனிவடிவாய்ப்பயிலுநல்லூர்க்
குழைகாதர்வந்தொருகோவணத்தைவைத்துக்
கொடுத்ததனையெடுத்தொளித்துக்குளித்துவந்து
தொழிலாருமதுவேண்டிவெகுண்டுநீரித்
துலையிலிடுங்கோவணநேர்தூக்குமென்ன
வெழிலாரும்பொன்மனைவியிளஞ்சேயேற்றி
யேறினர்வானுலகுதொழவேறினாரே. (கூ)

---

### திருப்பதிகக்கோவை.

வலஞ்சுழிநல்லூர்பழனமாமாத்தூரண்ணா
மலைகடம்பூரின்னம்பர்நாரையூரைந்தாம் (கரு)

---

### திருப்பதிக்கோவை.

படர்பாலைத்துறைநல்லூர்திருவாவூரதனிற்
பசுபதீச்சரஞ்சத்திமுற்றம்பட்டீச்சரமே. (ச)

## திருநல்லூர்த் திருப்புகழ்.

மூலமுண்டகனு பூதிமந்திரப
ராபரஞ்சுடர்கள் மூணுமண்டலஅ
[illegible]தாரசந்திமுக மாறுமிந்த்ரதரு வுந்தளிமேல-
மூதுர்ப்பல்வர் பீடமற்றுமுமி
லாதபந்தவொளி யாயிரங்கிரண
மூணுமிந்துவெள்ளி சோதிவிண்டடிக வீ[illegible]தம்;
ஓலமென்றுபல தாளசந்தமிடு
சேவைகண்டமுதை வாரியுண்டுலகி
ரேழுகண்டுவிளை யாடியிந்துகதி ரங்கிசூலம்-
ஓடுமந்தகலி காலொடுங்கநடு
தூணில்தங்கவரி ஞானவண்கயிறு
மீதணைந்துசத கோடிசந்த்ரவொளி சந்தியாதோ;
சூலியந்தரிக பாலிசங்கரிபு
ராரியம்பரிகு மாரியெண்குணசு
வாழிபங்கிசிவ காமசுந்தரியு கந்தசேயே-
சூரசங்கரகு மாரஇந்திரச
காயஅன்பருப காரசுந்தரகு
காளனுஞ்சுருதியோலமொன்றநடனங்கொள்வேலா;
சீலவெண்பொடியி டாதவெஞ்சமணர்
மாளவெங்கழுவி லேறுமென்றுபொடி
நீறிடுங்கமல பாணிசந்த்ரமுக கந்தவேளே-
தேவ ரம்பையமு தீண மங்கைதரு
மான ணைந்தபுய தீர சங்கரதி
யாகர் வந்துறைந லூர மர்ந்துவளர் தம்பிரானே.

உ

சிவமயம்.

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

ஆண்டார் துணை.

# நல்லூர்ப்புராணம்.

## காப்பு.

### காசிவிநாயகர்.

இருவினைவெண்டிரைமாய்க்கருங்கடலைத்தணித்தேற்றியெண்ணிலாற்றற்
பொருவருமாணவச்சேறு*கருணைநீராற்கழுவிப்போக்கிப்போகா
நிரதிசயானந்தநெடுநிலவெறிப்ப†வுயிர்முத்தநெடியதாய
மருவுதனதணிவாக்கமகிழ்காசிவாரணத்தைவணங்கிவாழ்வாம்.

## கடவுள் வாழ்த்து.

### கலியாணசுந்தரேசர்.

உலகெலாம்படைத்தருளிநிலைபெறுத்தியிளைப்பொழியவொடுக்கிமீட்டுந்
தொலைவிலர்வினைப்பயன்கடுய்ப்பவவை‡திரோபவித்துந்தொடர்ந்துநீங்
வலகிலாணவச்சத்தி§யாவரணம்விடநீக்கியருளாநிற்குங் [கா
தலைவர்மேதகுநல்லூர்ச்சவுந்தரநாயகரவர்தாடலைமேற்கொள்வாம். (௧)

### கிரிசுந்தரியம்மை.

பரையாதியைவகையாயருளாகியானந்தப்பரவையாகி
யுரைசாலும்விந்துமோகினிமகாளிமற்றுமெல்லாமுதிப்பச்சார்ந்து
புரைதீர்சத்தியும்வடிவுங்கரணாதியனைத்துமுக்கட்புனிதர்க்காகி
வருமாதைநல்லூர்வாழ்திருமலைச்சொக்கியைநாளும்வழுத்தல்செய்வாம். ()

### விநாயகர்.

கங்கைநெடும்புனறிளைத்துங்காளிந்தியெனக்காட்டக்கலுழிசாய்த்துந்
திங்களிளம்பிறைமுரிந்தமருப்பாமென்றயிர்த்தெடுத்துச்சேர்த்துமிவ்வா
றங்கணர்செஞ்சடிலநெடுங்கானில்விளையாடியுமையம்மைநோக்கிப்
பங்கயவாண்முகமலரவருமொருவாரணத்திருதாள்பணிந்துவாழ்வாம். (௩)

---

* 'பொழிகருணைக்குளிர்நீராற்கழுவிப்போக்கி' என்று பிரதிபேதம்.

† 'வுயர்' என்று பிரதிபேதம்.

‡ 'பயன்கடுய்ப்பவே' என்று பிரதிபேதம்.

§ 'யாவரணவிடநீக்கி' என்று பிரதிபேதம்.

### சுப்பிரமணியர்.

தோட்டிளம்பூந் துணர்கொழுதித் துதைந் தாடியஞ்சிறையசுரும்பினோடும்
பாட்டிளவண்டினமுரலுமலர்க்கூந்தலொருகுறத்திபுணைத்தண்ணுந்த
கோட்டிளமென்முலையுழக்கமுகையுடைந்துநறவூற்றுங்குழங்கன்மாலை [ம்.
மோட்டிளம்பன்னிருதடந்தோண்முருகனிருபதமுளரிமுடிமேற்கொள்வா

### திருநந்திதேவர்.

மந்தாரநறுந்தெரியற்செழுமணமும்பங்கயப்பூமணமும்வாசக்,கொந்
தாரும்பசுந்துழாய்த்தொடைமணமுமணந்துகுடிகொண்டுசோதிப், பைந்
தாமங்கொண்டதொருபொற்பிரம்புதனதுசெங்கைப்பதுமங்கொண்டு, சந்
தாருங்கயிலைமலைக்காவல்கொண்டோன்பதமுளரிதலைமேற்கொள்வாம். ()

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

முள்ளரையமுளரிமலர்த்தவிசிருக்குநான்முகனுமுகுந்தன்றானு
முள்ளரியசோதிமயமாகியநம்பெருமானையொருபொய்கைக்கே
கள்ளனிவனென்த்தனதுகண்மலர்கள்பிசைந்தழுதுகாட்டாநிற்கும்
பிள்ளைமலர்த்தாள்பிறவிப்பெருங்கடற்குப்புணையாகப்பிடித்துவாழ்வாம்.

### திருநாவுக்கரசுநாயனார்.

கொற்பயிலும்வெள்ளிலைவேற்கருந்தடங்கட்பசுங்கிளியோர்கூற்றின்வை
சிற்பரமனைந்தெழுத்தேநாத்தழும்புந்திறமேத்திச்சிக்கயாத்த [குஞ்
கற்புணையாற்கருங்கடலைக்கடந்துபோந்தவன்கருணைக்கடலின்மூழ்குஞ்
சொற்பயினாவலன்கமலத்துணைப்பதங்கள்சென்னிமிசைச்சூடிவாழ்வாம்.

### சுந்தரமூர்த்திநாயனார்.

பொருவேலைக்கடற்படுத்தநாகணைப்பள்ளியினானும்போதின்மீது
வருவானுமின்றளவுங்காணாதபதயுகளவனசஞ்சேப்பத்
தரைமீதிலரையாமத்தொருபரனைப்பரவைமனைதனக்குச்செல்கென்
றிருகாலுநடத்துதிருநாவலூர்நாவலன்றாளிறைஞ்சிவாழ்வாம். (அ)

### மாணிக்கவாசகசுவாமிகள்.

எக்கதியிற்புக்குழன்றுதிரிந்தாலுமெமைமேற்கொண்டிருப்போர்தம்மை
யக்கதியிற்பேர்ந்துமேலருங்கதியிலுய்ப்போமென்றறிவிப்பார்போற்
றொக்கநரிக்குலமனைத்துந்துரங்ககதிசெலநடத்தத்தொடர்ந்துபோற்றி
முக்கணனைப்பரசுமொருகவியரசினிருசரணமுடிமேற்கொள்வாம். (கூ)

### அமர்நீதிநாயனார்.

தன்னையேகோவணமாச்சாத்தினன்காணென்பதனாற்றானுமந்தப்
பொன்னைநேர்கோவணத்திற்கிணையாகச்சித்தாந்தப்பொருளீதென்ன
முன்னைவானவனிறுத்துமுத்திநலங்கொடுத்தருளுமுறைமைபெற்ற
மன்னராமமர்நீதிநாயனாரடிக்கமலம்வணங்கிவாழ்வாம். (௧0)

அறுபத்துமூவர்.

எவராலுஞ்செயற்கரியதிதுவிதுவென்றதிசயித்தேயெவரும்போற்றக்
கவராதவன்பதனாற்பலவேறுபத்திமையின்கடமைபூண்டே
யுவராழிநஞ்சமுதுண்டும்பரைக்காத்தருள்புரிந்தவொருவற்காளாந்
தவராசரொன்பதிற்றேழ்தலைவர்பதப்புண்டரிகந்தலைமேற்கொள்வாம். (௰)

மற்றைச் சிவநேசர்கள்.

எக்காலத்தினுமிருப்பான்பரவைகடைந்தமுதருந்தவிமையோரோடுந்
தொக்காலத்தினுநாகப்பள்ளியினுந்துயிலுமவன்சூழ்ந்தநாளிற்
புக்காலத்தினுமமுதமாக்கியகோனடித்தொழும்புபூண்டுபோர்மேன்
முக்காலத்தினுமுளராமடியார்சேவடிக்கமலமுடிமேற்கொள்வாம் (௧௨)

வாழ்த்து.

அந்தணாளர்கள்வாழ்கவானினங்கள்பெருகுகவானமரர்மல்க
வந்துமாமழைபொழிகவேந்தனுமோங்குகவுலகமலிகநாளு
மெந்தையாரைந்தெழுத்தும்வெண்ணீறும்விளங்குகபாரெவையுமாகி
முந்தைநான்மறைநெறியுஞ்சைவநெறியுந்தழைகமுறையாலன்றே.

நூல்வரலாறு.

சூதமுனிவரன்றெளியவடமொழிமாக்கடலினிடைத்தொகுத்துத்தூக்கி
வேதவியாதன்பகர்ந்தநல்லூர்மான்மியமதனைவிருப்பினாலே
யாதிமறையவர்சைவர்* தலந்தானமாகியுள்ளோரரன்புபூண்டோ
ரோதுகெனப்பசுந்தமிழால்யானுமவர்பணிமேற்கொண்டுரைக்கலுற்றேன்.

அவையடக்கம்.

வேறு

ஆசில்வண்டமிழாரியமுற்றுணர்
மாசனம்பலவாழுநல்லூரில்யான்
பேசவந்துறுபெற்றிகொற்சேரியி
னூசிவிற்பதற்குற்றதொப்பாமரோ. (௧)

நல்லசொற்பொருணன்புலவோர்க்கெதிர்
சொல்லலுற்றதுணிவையென்சொல்லுகேன்
மெல்லிதாமின்மினிவெய்யவர்க்கெதி
ரல்லனீக்கற்கமைந்ததொப்பாமரோ.

ஆ திருவிருத்தம்-௧௭.

* 'தவந்தானமாகி' என்று பிரதிபேதம்.

## முதலாவது

## நைமிசாரணியச்சருக்கம்.

செற்றநீக்கியசிந்தையர்செய்கையி
னற்றமில்லவரைம்புலன்வென்றவர்
பெற்றமூர்திதன்பேரருள்பெற்றுளார்
முற்றுமோதியுணர்ந்தமுனிவரார். (௧)

வெய்யவேனில்வெதுப்புமந்நாளிடை
யைவகைநெருப்பின்னடுவத்தினும் *
பெய்யுமாரிவயிற்பெருக்கத்தினுஞ்
செய்யுமாதவமுற்றியசெய்கையார். (௨)

பாரும்விண்ணும்பழிச்சும்படிமையா
ராருமொப்பவருள்புரிமேலவர்
மேருவெற்புவிழுதுவிட்டாலென
வாருஞ்செய்யசடைமுடிவாய்ந்துளார். (௩)

பேறுபூத்தபிராட்டிபிரிவிலாக்
கூறுபூத்தகுழகனுக்கன்பினார்
வீறுபூத்தவெண்பூதிமிளிர்தலா
னீறுபூத்தநெருப்பன்னமேனியார். (௪)

பஞ்சழுத்தினும்வாடும்பதயுக
வஞ்சிபங்குடைவள்ளல்வடிவமாய்
விஞ்சுவெம்பவவேலைவடவையா
மஞ்செழுத்துமழுத்தியசிந்தையார். (௫)

நக்கனாருணேக்கநயந்திலா
விக்குவேலையிகந்தமைகாட்டல்போற்
றக்கனார்மகஞ்சாய்த்தவர்தண்ணளி
யக்கமாமணியாரம்புனைந்துளார். (௬)

திங்கண்மாசுதிரைத்திடல்போலவுங்
கங்கைகாளிந்திபாய்தல்கடுப்பவுந்
துங்கமானினுரிவைதுயல்வரப்
பொங்குநீறணிமார்பிடைப்பூண்டுளோர். (௭)

* 'நெருப்பின்னழுவத்தினும்' என்று பிரதிபேதம்.

உண்டிகாய்கிழங்கூழிலையாதிய
கொண்டுநீர்பகல்போக்கியகொள்கையார்
மண்டுதண்ணளியோடுசென்மார்க்கம்போற்
றண்டுகுண்டிகைதன்னொடுந்தாங்கினர். (௮)

புருவநாப்பணிற்கண்கள்புகச்செய்து
மருவுநாசிநுனிவயின்வைத்துகந்
தருவமானவான்மாவையான்மாமடுத்
துருவவோவியமொப்பவுறைகுவார். (௯)

பருகுவாரிற்பரன்கழல்சிந்தைவைத்
துருகியுண்ணெக்குரோமஞ்சிலிர்ப்புறக்
கருணைவாரிதிளைத்திருகண்கணீ
ரருவிபாயுவகமகிழ்வெய்துவார். (௧௦)

அழிவிலாதவவித்தைதவன்சேதகம்
வழுவின்ஞானவரநதிவாரியாற்
கழுவிச்சச்சிதானந்தக்கடலிடை
முழுகுவாரடுமுப்பகைவென்றுளார். (௧௧)

இன்னதன்மைமுனிவரர்யாவரு
மன்னவூர்தியமர்ந்துறைநாட்டகந்
தன்னையுற்றிருதாமரைத்தாண்மலர்
முன்னிறைஞ்சிமுறைமையிற்போற்றினர். (௧௨)

போற்றிநிற்றலும்புண்டரிகத்தவ
னேற்றமிக்குளிரெய்தியதியாதென
நோற்பதற்கிடநோக்கிவந்தாமெனச்
சாற்றினரெதிர்நான்முகன்சாற்றுவான். (௧௩)

நன்றுநன்றுநீர்நாடிவந்துற்றமை
யென்றுநேமியிருங்குசையாலவ
னென்றுகண்டினிதூரவிட்டதுபோய்ச்
சென்றுவீழ்தலமேதவஞ்செய்தலம். (௧௪)

ஆமிநேமியடுத்துமெய்யந்தணிர் *
போமினென்றுபுராதனன்கூறலுங்
காமமாதி †கடிந்தவரத்தகை
நேமியோடும்விடைகொண்டுநீங்கினர். (௧௫)

* 'மெய்யந்தணர்' என்று பிரதிபேதம்.
† 'கடந்தவர்' என்று பிரதிபேதம்.

நீங்கியந் தணர்நேமிபோய்வீழ்தல
மாங்குவைகிய தற்கபி தானந் தா
ஞேங்குநைமிசமென் றினிதோதியே
பாங்கின்மெய்த் தவம்பற்பலவாற்றினார். (கசு)

வேறு.

அனைய தன்மைய நைமிசத் தணிநலமதனை
யினைய தன்மையதெனவுரைப்பவரெவரெனினுங்
கனைகருங்கடனிலையினைக்காண்பவர்கடுப்ப
துனிவிலா தரவாற்சிலசொல்லுதுமன்றே. (கஎ)

செற்றமில்லது சிறுமையிற்றீர்ந் ததுதெறுமுக்
குற்றநீக்குவ தருணலங்கொழிப்ப துநாளு
மற்றமில்லதுபற்பலவணிநலந் தழைத்து
நற்றவப்பயிர்விளைப்பதுநைமிசாரணியம். (கஅ)

சீதமாமதிசென்னியின்மிலைச்சியதிறத்தார்
போதுலாங்கணைக்காமனைப்புறங்கண்டபொலிவால்
வேதபாரகர்வியந் தடிநிழன்மிடைதலி
னாதனேரெனச்செழித் ததுநைமிசாரணியம். (ககூ)

சங்கமேந்திய தன்மையாற்றிகிரி தாங்குதலாற்
பொங்குபாசொளி தழைத்தலாற்புவிபுரந்திடலாற்
றுங்கமாமணிவயங்கலாற்றருகெடற்பிறந்த
நங்கைகாந் தனையொத் ததுநைமிசாரணியம். (உ0)

தேன்முகத் தலருறுதலாற்செவ்வியநிலையால்
வான்முகத்தொடுதிசைமுகமணந் தருண்மாண்பா
னான்முகத் தலர்மறையொடும்விளங்குநோன்மையினா
னான்முகத்தயனொத்ததுநைமிசாரணியம். (உக)

மறுவில்வெண்டிங்களாமெனப்பளிக்கறைவயங்க
வுறுபுனற்புளினங்கள்வெண்ணிலாவொளியொழுகக்
கறுவொடுந் துரந் தடுமிருட்படலங்கள்கடுப்ப
நறுமலர்ப்பொழில்செழித் ததுநைமிசாரணியம். (உஉ)

கதிர்கொண்மாமணிகையரிக்கொண்டுபொன்கொழித்து
முதியகாரகின்முரித்திருமருங்கினுந்திரைத்துப்
புதியநாண்மலர்க்குங்குமஞ்சாந்தொடும்பொருது
நதிகளீறிலபொலிந் ததுநைமிசாரணியம். (உ௩)

அண்ணலின்புறுமாதவர்சிந்தையினழ்ந்து
வண்ணவாரிசமவர்முகமாமெனமலர்ந்து
திண்ணிதாமவர்செயலெனலாகியேதெளிந்து
நண்ணுமோடைகண்மலிந்தது நைமிசாரணியம். (உச)

அளிபயின்றதிசீதளமாகியேகண்ணீர்த்
துளிபயின்றகு*மலர்க்கஞ்சமதனெடுந்துவன்றித்
தெளிபயின்றுறுதவரெனநிறைந்துநீர்ச்சிறந்த
நளிபயின்றபூந்தடத்தது நைமிசாரணியம். (உரு)

வாகைமாயனுமவன்முன்னையவனும்போன்மகிழ்ந்து
வேகயானையுமுடங்குளைமடங்கலுமேவத்
தோகையாடலுந்துத்தியம்பணம்விரித்தடுத்து
நாகமாடுதல்புரிவது நைமிசாரணியம். (உசு)

பருவமாறுந்தம்பண்பினைவழாநிலைபயப்ப
வருதல்கூடினும்வசந்தகாலத்தியன்மான
வுருவநீண்முடியும்பரதுலகமேயொக்குந்
திருவநீள்பொழில்செறிந்துயர் நைமிசாரணியம். (உஎ)

ஒளிக்கவின்பெறுமதியிடைப்படிநிழலொப்பப்
பளிக்கறைத்தலமடுத்துமான்கன்றுகண்படுக்கு
முளக்கணேக்குடையுறுதவர்சாலைகடோறும்
விளக்கமாமெனமாமணிவயின்வயின்மிளிரும். (உஅ)

பூத்தகோங்கமும்பூந்துணர்ப்பூவையுஞ்சிவந்து
மாத்தளிர்த்தவுமாதவர்வழிபடல்புரியு
மூத்தவேதனுமுகுந்தனும்புராரியுமாகு
மாத்தர்மூவருமென்னவேயணிநலங்கவினும். (உகூ)

அரத்தமூட்டியதெனத்தளிர்குழைத்துயரசோகம்
புரத்தல்செய்தருள்புராந்தகற்பொருவவன்னவற்கு
விருத்தவேதியரெடுத்திடுந்தீபம்போல்விளங்குந்
திருத்தமீக்கொளநிரைநிரைபூத்தசெண்பகங்கள். (௩0)

அடுத்தசெந்தளிர்ச்சூதமேயுதயவெற்பதனிற்
றொடுத்ததேனிறால்பரிதிமண்டிலமதிற்சோர
விடுத்ததாரைகளிருளினைப்பருகியவெய்யோன்
மடுத்ததன்னுடைக்கிரணங்களுமிழ்வதைமானும். (௩க)

* 'மலர்ந்தஞ்சமதனெடுந்துவன்றி' என்று பிரதிபேதம்.

பறத்தல்செய்கலாக்குளவியும்பூவையும்பாயாத்
திறத்தவேங்கையும்வாணியுமுமையுமத்திருமா
னிறத்துவாழ்தருசெல்வியும்போன்மெனநிறைதேம்
புறத்துவண்டினங்கூட்டுணமலர்வனபொதும்பர். (௩௨)

காடுகொள்வனசமிதையுங்காழகிற்குறடு
மாடுகொள்வனதருப்பையும்பரப்பும்வாலுகமும்
கோடுகொள்வனவலரியுங்கனிகளுங்குழியி
னூடுகொள்வனகிழங்குநீடொளிமணிவிளக்கும். (௩௩)

மடல்விரிந்தலர்பூந்துணர்மலிவனவெங்குங்
கடல்விளைந்தவின்னமுதநேர்கனிவகையெங்கு
முடைதிரைக்கடலெனநருவொழுகுவதெங்குங்
குடைந்தாம்புனனிறைவனகுளம்பலவெங்கும். (௩௪)

இன்னநல்வளந்துவன்றியநைமிசமெனும்பே
ரன்னநல்வனத்தருந்தவர்முனிவரரன்பான்
முன்னைநான்முறைச்சத்திரமகவினைமுற்றிக்
கன்னிபாகனைப்போற்றினருறைகின்றகாலை. (௩௫)

மானினங்களுமரைகளும்வழிவந்துகாட்ட
வீனமற்றுயர்மாதவிபூம்பந்தரெடுப்பத்
தேனிறைத்தலர்பாதவஞ்சேவடிசிந்தக்
கானிடைப்படர்கருணைகூர்காலமேகடுப்ப. (௩௬)

வெள்ளைநீற்றொளிகுலவியமேனியான்மிளிரும்
வள்ளலக்கமாமணிவடந்துயல்வருமார்பன்
கொள்ளைவெம்பவக்குறும்பெறிதவரொடுங்குழுமித்
தள்ளருந்தவச்சூதன்வந்தவருழைச்சார்ந்தான். (௩௭)

சார்ந்தசூதனையெதிர்கொண்டுதவத்துறைபுரப்போ
ரார்ந்தவாதரவுவட்டெடுத்தொழுகவாங்கவற்கு
நேர்ந்தபாத்தியமுதலியநெறிமையினீந்து
வார்ந்தநீடொளியாதனமளித்தனர்வாங்கி. (௩௮)

வந்தசூதமாமுனிவரன்வதனபுண்டரிகத்
தந்தணாளர்கள்விழியளியினங்கள்வீழ்ந்தளவச்
சிந்தையின்புறநன்னயமொழிபலசெப்பித்
தந்தமன்பினுள்ளவளாயாதரந்தழைத்தார். (௩௯)

சங்கவாரிதிமாமதிகாண்டலுந்தழங்கிப்
பொங்குமாறுபோன்மாதவருடலகம்பூரித்
திங்குநீவரவெத்தவம்புரிந்தனமென்று
மங்கைபங்கினன்மான்மியம்வினவுவான்வலித்தார். (சO)

பாசவல்லிவேரரியுங்கூன்புள்ளமாய்ப்பார்மீ
தூசல்போன்றுழல்பிறந்தைமாக்கடலுக்குத்தரமா
யாசைபோகியவவிச்சைவல்லிருளிற்காதபமாய்
மாசிலாதனமறைப்பொருள்விரிப்பனவாகி. (சக)

காயும்வெங்கலிக்கலுழிக்குக்கதகமாயின்ப
மேயும்வீட்டுலகேறுதற்கேணியாயிசைந்த
வாயுமூவறுபுராணமும்வியாதனுமருள்கூர்
நீயுமன்றிமற்றியாவரேநெறிதெரிந்துணர்வார். (சஉ)

ஆதலாலுனதானனமலரினனைத்துங்
காதல்கூர்தரக்கேட்குமாறுவந்தனங்கனிவால்
வாதராயணன்மலரடிவணங்கியசூத
வோதுவாயெனவோதியேபின்னரொன்றுரைப்பார். (சந)

நிலஞ்செய்மாதவமெனவருநெடுந்தவச்சூத
வலஞ்சுழித்தலமான்மியமுன்னர்நீவகுத்தாய்
புலங்கொளஞ்செவிபடைத்ததற்குப்பயன்பூப்பக்
கலங்கலின்றியாங்கேட்டுளங்களித்தனமிப்பால். (சச)

பள்ளநோக்கியபுனலெனப்பரம்பரனல்லூ
ரெள்ளரும்புகழ்ப்புராணம்யாமின்றுகேட்பதனுக்
குள்ளமாதரவுற்றதான்மற்றதனுண்மை
வள்ளனீமொழிவாயெனவகுத்தவன்மொழிவான். (சரு)

துனிவின்மெய்த்தவத்தந்தணீர்தூநெறிப்படர்வான்
வினவுமித்திறநன்றுநன்றெனவிளம்பி
யினையுதித்துணைத்தெதன்னயானியம்புமத்தகைத்தோ
வினையதாயினுமறிந்தவாறியம்புவனன்றே. (சசு)

என்னமாதவச்சூதனுமியம்பியன்பதனுன்
முன்னமேவியசௌனகன்முதலினோர்முகம்பார்த்
தன்னவூர்திநேரந்தணீர்கேண்மினென்றுய்ந்து
கன்னன்மென்றெனக்கட்டுரைபுரிதன்மேயினனால். (சஎ)

நற்றவத்தினீர்நலங்கெழுசுந்தரநகரி
னுற்றநல்வளமுரைத்தபின் மான்மியமுரைப்பன்
பெற்றமூர்தருபிஞ்ஞகனருளினுலென்று
வற்றமின்றியவதன்வளமுரைப்பதற்கமைந்தான். (௪௮)

ஓதுமந்நகர்சுந்தரநகரெனவுலக
மாதவத்தினிருரைக்குமான்மற்றதன் மாண்பு
பேதையேனறிந்துரைப்பதோவாயினும்பெரிதுங்
காதலாற்சிறிதியம்புவனென்றுகட்டுரைப்பான். (௪௯)

## யாற்றுச்சிறப்பு.

வேறு.

சையமால்வரையிடத்தினிற்றோன்றித்தராதலந்தனக்கொருதாயாய்ப்
*பெய்யுமாமழைதான்†மறுப்பினுங்கோள்கள்பிறழ்ந்துதந்நிலைபெயர்ந்தி
மெய்யுமாதவத்தோருரையெனப்பொய்யாதுறசுவையமுதெனவாகி [டினு
வையமீதுதவிக்கடலகநிறைப்பவருவதுகாவிரிநதியே. (௫0)

சந்தனக்குறடுமேலமும்வரன்றித்தடஞ்சினைக்குங்குமஞ்சாய்த்துச்
சிந்துரமருப்புங்கவரியும்வீசித்தேக்கெறிந்திலவங்கஞ்சிந்தி
யிந்திரதிருவிலெனக்குலமணிகளிருகரைமருங்கினுங்கொழித்து
மைநதுடைக்களிநல்யானைபோற்கலித்துவருவதுகாவிரிநதியே. (௫௧)

குஞ்சராரணியந்திரிசிரப்பொருப்புக்குலவுமையாறுவண்குடந்தை
மஞ்சுசூழ்சோலையிடைமருதோங்கும்வளங்கொண்மாயூரம்வெண்காடோ
டெஞ்சலிலினையபற்பலதானமிருகரைமருங்கினுந்தழைப்பச்
செஞ்சடைப்பெருமானருளெனப்பெருகிச்செழித்ததுகாவிரிநதியே. (௫௨)

சங்கமேவுதலாற்பற்பலதுறைகள்சார்தலாற்சந்தமார்தலினாற்
பொங்கொலியம்போதரங்கநண்ணுதலாற்பொன்மலிபூமலிந்திடலால்
வங்கநீள்வெள்ளக்கடன்மடுத்தலினுல்வடித்தசெந்தமிழெனலாகி
யெங்கணுநிலவியணிநலங்கனியவியல்வதுகாவிரிநதியே. (௫௩)

தெள்ளுபூந்தரங்கம்பொலிதலாற்குழைபாய்செங்கயல்குமிழ்மறிதலினாற்
கள்ளுலாங்கமலமலர்தலாற்பவளக்கடிகைமாநித்திலநிரையா
லள்ளால்பாய்ந்திலங்கும்வலம்புரியதனாலாழியம்புட்குலமவற்று
லொள்ளியவராலால்யாமையான்மாதரொத்ததுகாவிரிநதியே. (௫௪)

---

* 'பெய்ய' என்று பிரதிபேதம்.

† 'மறப்பினும்' என்றும் 'வறப்பினும்' என்றும் பிரதிபேதம்.

கங்கைகாளிந்திவாணிபற்குனியான்கவுதமைவைகைதண்பொருனை
யிங்கிவைமுதலாநதிகளுந்தடங்களெத்துணைக்கோடியும்வந்து
தங்கண்மாசகலப்படியுமாலெனநூல்சாற்று*மாற்காவிரிமேன்மை
யங்கண்மாநிலத்தில்யாவர்கட்டுரைப்பாரனந்தனுமனந்தநாவிலனே. (ருரு)

## நாட்டுச்சிறப்பு.

அளவிலாப்பெருமைத்தாயவிப்பொன்னியணிநதியாய்தலினாலும்
வளமெலாங்†கனிந்துதிருநிலமடந்தைமங்கல‡வணியெனமல்கித்
தளவவாணகையாள்பங்கினனமருந்தானமும்பர்பலதழைத்துத்
துளவமாலுதரநிகர்த்ததுவானுந்தொழுவதுசோழநன்னாடு. (ருசு)

பாளைவாய்க்கமுகுந்தூக்குறிக்குடக்காய்ப்பருமுடத்தாழையும்பராரைக்
கோளுலாம்பசுமுட்புறக்குடக்கனிகள்கொம்பிறப்பழுத்தவண்பலவு
நீளிருஞ்சினையகொழுங்கனிமாவுநெட்டிலைக்கரும்பும்வாழைகளு
மாள்வழக்கறுக்குஞ்சாலியுமல்லாலடவியொன்றில்லதந்நாடு. (ருஎ)

கொழுங்கதிர்ச்சாலிவேலிசாய்த்தரம்பைக்கூன்புறப்பழக்குலைகுலுக்கிச்,செழுஞ்சுவைக்கரும்பின்காடலைத்துந்தித்தேன்பொதிமாங்கனிசிதறி,யெழுந்துமேல்§வெளிபோய்முப்புடைக்குடக்காயெற்றிநீள்வருக்கைமேற்றுவிப், பழம்படுஞ்சடைத்தாற்றிளம்பெருங்கமுகின்பாளைவாய்வாளைபாய்ந்துழக்கும். (ருஅ)

போற்றுநற்றருமாதிகள்கவையடியாப்போகமும்வீடுநீண்மருப்பாப்
பாற்கடல்வயிறுசூற்கொளுஞ்செருத்தல்பழனமும்பழம்பதிகளுமா
நாற்றிசைமுகமுமுலையொருநாள்காநாடோறும்வரைமுதலவற்றிற்
றேற்றுநால்வகையவமிர்தமுஞ்சுரக்குஞ்சுரபிவண்சோழநன்னாடு. (ருகூ)

தணவுதலரியவறங்களெண்ணான்குந்தந்தளித்திடுதலாற்பசும்பொற்
கணமலையரசன்பாவையும்போலுங்காட்சியிற்றிருவையுமானு
நணுகுதல்புரிந்திட்டுழுதொறும்வளங்கணவநவமாகநல்குதலா
லுணர்தொறுமுணர்வுதருமருமறையுமொக்குமாற்சோழநன்னாடு. (சு0)

வேண்டுநெல்லுணவுபயந்திடும்விளையுள்விளைக்குநரந்தணர்துறந்தோர்
காண்டகுசிறப்பிற்றொலைவிலாப்பொருள்கள்கலத்தினுங்காலினுந்தருவோ
ரீண்டுவதளப்பில்வளங்களால்விரும்பியேனைநாட்டவருமெய்துவது
தூண்டுவாம்பரியிற்றிரையெறிபொன்னிசூழ்வருசோழநன்னாடு. (சுக)

---

* 'மாக்காவிரி' என்று பிரதிபேதம்.
† 'கனிந்த' என்று பிரதிபேதம்.
‡ 'வணியினமல்கி' என்று பிரதிபேதம்.
§ 'வெடிபோய்' என்று பிரதிபேதம்.

நனிபெயல்பெயன்மற்றின்மைமூடிகந்தீநலவுபெறுபதங்கம்பைங்கிளிளை
முனிவுசெயரசென்றினையவீதிகடீர்முறைமையாலாற்றவும்விளைவ
தினிதலாப்பகைவந்திறுத்தலானீதியிலாமையாலுண்டியின்மையினாற்
றுணிவுகூர்ந்தேனைநாடொருங்குறினுஞ்சுமப்பதுசோழநன்னாடு (சுஉ)

உறுபசியோவாப்பிணியுடனொருவியொருபுடையதன்கணின்றிறுத்துச்
செறுபகைசோரராறலைப்போர்கடீத்தொழிற்குறளைகூறுநர்கண்
மறமிகுகேழல்குடாவடிவேங்கைவஞ்சனைக்குறும்புமில்லதுநீர்த்
துறைதொறும்பொன்னிபொன்கொழித்தென்றுஞ்சூழ்வருசோழநன்னாடு.

அடுபகையதனாற்கெடுவெந்தயறியாதரிதினிற்கெடுவகையுறினுங்
கடிமலர்ப்பழனந்தண்டலைகளினாகரங்களின்விளைவனபடுவ
வுடையதுதூரவுகேணியாறுறுவதொருபுடையாய்வளம்பயக்குந்
தடவரையழியாநகரிபற்பலவுந்தழைப்பதுசோழநன்னாடு. (சுச)

வெம்பிணியிலாண்மைசெல்வமிக்குடைமைவிளைவின்பமேமமென்றின்ன
வைம்பெருங்கவினுங்கெழீஇயதுவாழ்வோரலமந்துவருந்துருவகையாற்
றம்பமாகியநல்வளங்கடாந்தாமேசார்வதித்தகையனபிறவுஞ்
செம்பியர்புரப்பச்சுரப்பதுகாளுஞ்செழிப்பதுசோழநன்னாடு. (சுரு)

வேறு.

வானளப்பனமாதிரமளப்பனவாசக்
கானளப்பனகரிவரமளப்பனகளிக்குந்
தேனளப்பனதிகிரிமாலெனவுலகெல்லாந்
தானளப்பனவளப்பிலதண்டலைநிலையே. (சுசு)

சந்தநீடுவசண்பகவகுளங்கடழைப்ப
கொந்துலாமலர்ப்பாடலஞ்சாளங்கள்குழைப்ப
கந்திசூதநீள்வருக்கைகாகோளிபுன்னாக
மந்திபாய்ந்துகடாழைதேமாவிவைமலிவ. (சுஎ)

கொந்துலாமலர்துதைதவனகுரையளிகுமுறச்
சந்தநீடிசைமாங்குயின்மிழற்றுவதவழ்ந்து
மந்தமாருதங்குலவுவமஞ்ஞைகணடிப்ப
விந்திராதியருறைவதற்கேக்கறுந்தகைய. (சுஅ)

மாங்குயிற்குலமேழிசையெழுப்பலுமயில்கள்
பாங்கினடல்செய்பனிமலர்த்தண்டலைதவழ்வ
தேங்கொள்கூந்தலுக்கிடும்புகையல்லதுசெறிந்த
பூங்கரும்படுநறும்புகையல்லதுபுயல்கள். (சுகு)

கயலுற்றோடரிக்கண்ணியர்கண்ணியிலகப்பட்
டயலுற்றோடுதலறிகலாவாடவர்கடுப்பப்
புயலுற்றோடும்பொதும்பரிற்புனைமலர்மடலின்
மயலுற்றோடுவவரிமிடற்றளியினமாதோ. (எ0)

தென்றலஞ்சிறுகுழவிக்குமுன்றிலாய்ச்செழிப்ப
மன்றவேனிலான்மருவவத்தாணியாய்மலிவ
வொன்றியாடுமொமஞ்ஞைகட்கரங்கமாயுறவ
வென்றிவேள்பசும்புரவிக்குப்பந்தியாய்மிளிர்வ. (எக)

மடுத்துநோக்கியநாட்டங்கள்வாங்கொணவளத்த
வடுத்தவெய்யவனெழுபரிக்காவணமாவ
விடுத்ததேன்மழைபிலிற்றுவவெண்மணற்றலத்த
தொடுத்ததாரெனப்பூந்துணர்நாறுவசோலை. (எஉ)

உழவரோதையுமொழுகுநீரோதையுநாட்கோள்
விழவரோதையும்விதைக்குமாவோதையும்*விழையுங்
கிழவரோதையுங்குரவையினோதையுங்கெழுமி
†மழவரோதையுமலிவனவளனுடைவயல்கள். (எங)

ஆலைபாயுநரரவமுமகன்பணையுழுநர்
மாலையேருரப்பரவமும்வளமுடிநடுமோர்
காலையெய்துநர்குரவையினரவமுங்கலித்து
வேலையேழினுமெழுமடங்கெழுவளவிம்மி. (எச)

மணக்குமோதியர்மழலையைக்கவர்ந்தனவென்னுத்
தணப்பிலாதவைதண்டித்துக்கொள்ளுநர்கடுப்பக்
கணக்கரும்புகள்கழித்தியாப்புறுத்துக்கண்ணுடையா
விணக்குமாலையிட்டொறுக்குநரிடந்தொறுமாதோ. (எரு)

ஆலுமாதரார்மிடற்றினுக்கஞ்சியபூகங்
காலுமுத்துடன்மாணிக்கங்கையுறையாக
வேலுமாறுகொண்டேந்துபுநிற்பதுமானச்
சூலுவாளைகளுடன்பழுக்காய்க்குலைசுமக்கும். (எகூ)

கலிகொள்வண்டினநறவுகூட்டுண்டுடன்களித்தே
யொலிசெயோதியருருவிற்குடைந்தனமென்னுப்
புலியடிக்கொடுங்காய்க்குலைபூவொடுங்கதலி
தலைவணக்குநர்போன்மெனவிடந்தொறுஞ்சாய்க்கும். (எஎ)

---

* 'விளையும்' என்று பிரதிபேதம்

† 'மழைவரோதையின்' என்று பிரதிபேதம்

குலவுவான்முடிநடுபவர்குரவைக்குவியந்து
பலவுமாவுமாதுளங்கமும்பசும்பொனுமறனைத்
துலவு*செம்பொன்மாணிக்கமுழுதவுதலைபோல
நிலவுமென்பழங்கனிந்தனநிரைநிரைசிந்தும். (எஅ)

கானலம்புசெங்கமலத்தம்பூமடல்காலுந்
தேனலம்பியுந்தீங்கனித்தேறலுட்டிளைத்தும்
பூநறுந்துகளாடியும்பொருபுனல்வாளை
வானிலிந்திரவில்லெனவளைந்துமேல்வாவும். (எகூ)

தேன்கணூறியசெந்நெலும்வெண்ணெலுஞ்செறிந்து
வான்கணீடியகன்னலும்வாழையுங்கமுகுங்
கான்கொண்மாவுடன்வருக்கையங்கானமுமல்லான்
மீன்கிணத்துணையாயினும்வெற்றிடமின்றால். (அ௰)

குரம்பிற்காந்துவகொழித்திடும்பசும்பொன்செம்பவளம்
பரம்பிற்காந்துவவிடறியபன்மணித்தொகைகள்
வரம்பிற்காந்துவவலம்புரியுயிர்த்தவெண்முத்தங்
கரம்பிற்காந்துவகளையெனக்களைந்தெறிகழுநீர். (அக)

எருமைப்போத்துடனேற்றினஞ்சிலம்பப்பண்ணுறுத்தி
யுரிமைமள்ளர்களுழுந்தொறும்பாய்வனவெழுந்து
வரிவரான்மடிமுட்டலும்வரிமுலைசுரந்து
சொரியும்பாலலாற்கமலங்கடோடுடைந்துகுதேன். (அஉ)

சங்குசூலுளைந்தலறிச்செந்தாமரைப்பொகுட்டி
னங்கணீன்றவெண்முத்தினைக்கருவெனவயிர்த்துப்
பொங்குநீடொளிப்பொலன்சிறைத்தோலடிச்செவ்வாய்ச்
செங்கணோதிமப்பேடைகள்சென்றடைகிடக்கும். (அங)

உழவர்சும்மையுமுறுபகடோப்புநர்கலிப்புங்
குழுமிவான்முடிநடுபவர்குரவையுங்குயங்கைத்
தொழுவர்நெல்லரியரவமுமரிபலதொகுக்கு
மழவரோதையுமாறுமாறாய்த்தலைமயங்கும். (அச)

இட்டபோரழித்தெருமைவன்பகட்டினாற்றெழித்தாங்
கட்டமாகவைகளைந்துகாலுறுத்துநெல்லமலை
நெட்டைமேருமால்வரையெனக்கதிருடனிலவார்
வட்டமாமதிவலஞ்செய்வாணினைந்தலம்வருமால். (அரு)

---

* 'செம்பொனுமாணிக்கமுழுதவுதீல்போல்' என்று பிரதிபேதம்.

பழங்கொள்பண்டியும்* பாசிலைப்பண்டியும்பழுக்காய்த்
தழங்குபண்டியுமெல்லிலைப்பண்டியுந்தாழைச்
செழுங்குலைப்பண்டி† தன்னுடன்முதிரைநெற்சிறப்ப
வழங்குபண்டம்பெய்பண்டியுந்தலைத்தலைமயங்கும். (௮௬)

ஆரமாமுலையங்கலாருணக்கியவிரீகி
யோருநீடுகிர்வாரணமோப்புவவுலவாச்
சாரலோங்கியதூம்புடைவான்றொடுந்தகைய
வேரல்பாங்கரின்விண்டுகண்சொரிமுத்தமாதோ. (௮௭)

இளைக்குநுண்ணுசுப்பந்நலார்புலிமுழக்கென்று
வளிக்கும்பாலவிரயுழாவகைய்ச்சுறுத்துவன
பளிக்குப்பாறையிற்பட்டவெண்டயிருடைந்தழுங்க
வளைக்கையாய்ச்சியர்மதித்திடுமத்தொலிமாதோ. (௮௮)

நீர்த்தடம்பணைநிலவியபேட்டிளவன்னம்
பார்ப்பினந்தழீஇவெருக்கொளநெருப்பெனப்படர்வ
கார்த்தடங்கடற்கானலங்கழிக்கரைகிளைத்த
வார்ச்செழுங்கிளைவளர்பவளக்கொடிமன்னோ. (௮௯)

## நகரச்சிறப்பு.

முத்தவெண்மணியிருவிளிம்பெறிந்திடுமுறையாற்
பத்திபத்திசெம்பதுமங்கண்மலர்ந்திடும்பண்பா
லத்தர்சுந்தரநாயகர்க்கவனிமாதேந்துஞ்
சித்திரப்படாமொத்தனதீர்த்தநீர்த்தடங்கள். (௯0)

கடவுளர்க்கடுதளித்துமைகாதலர்க்கனலும்
விடமளித்திடுதவற்றினைப்பொறுத்தற்குவேண்டி
மடல்செறித்தபூவாரிசக்கைத்தலங்கூப்பிக்
கடன்மடுத்தெனக்குலவுவகயம்படுதடங்கள். (௯௧)

விரும்புவெள்ளியங்கடங்களுமேதினிவிற்கு
மரும்பொனாடகக்குடங்களுமவிர்மணித்தசும்புஞ்
சுரும்புலாவருதுறைதொறுந்தோய்வனவன்றிக்
கருங்கலம்படியாதனகன்னியந்துறைகள். (௯௨)

விலகிவில்லுமிழ்விரிகதிர்க்கடவுண்மண்டிலத்தைத்
திலகமாமெனத்தீண்டுவதெண்டிரையாடை
யுலகளந்தவனொப்பனவுலகமேழனைய
நிலையமேழினையுடையனநெடியகோபுரங்கள். (௯௩)

---

* 'பகர்விலை' என்று பிரதிபேதம்.
† 'தன்னுடனமுதினேர்சிறப்ப' என்று பிரதிபேதம்.

மேருமால்வரைச்சிகரத்தின்விளங்குபொற்றாவி
யாருமந்தரப்பொருப்பினையொப்பமற்றதனைத்
தேருமாமணிகுயிற்றியநெடுமதில்செறிவ
தாருநீளுடலுரகநாண்சூழ்ந்தமைதாப்பாமால். (௯௪)

வேறு.

தீற்றுவெண்சுதையுடைச்செறிந்தமாடங்கண்
மேற்படப்புரிசையுள்விளங்கித்தோன்றுவ
தாற்பழுத்தன்னமட்கலத்திலட்டதீம்
பாற்குமிழிகளெழுந்தனையபண்பிற்றே. (௯௫)

கூறுகூறினமணிகுலவுநீர்மையான்
மாறுமாறெதிரெதிர்மலிந்தவோசையால்
வேறுவேறிடந்தொறுமிருந்தசங்கத்தா
லாறுநேராமெனக்கிடந்தவாவணம். (௯௬)

கொண்டலைத்தொடுவனகும்பம்வாய்த்தன
வெண்டரளத்தவான்கோடுவிஞ்சின
தண்டுதலின்றியதானநீர்ன
மண்டுதொட்டியமதமலையுமல்லன. (௯௭)

மருங்குவீழ்திரையினமணியின்மல்கின
பொருந்துநீள்வேலையபுடைகுலாவுவ
திருந்தியமாதரையடுத்த*செல்விய
கருங்கடலல்லனகளபந்தீற்றின. (௯௮)

பாட்டளிதுதைந்தனபதுமம்பூத்தன
மோட்டுடல்வலம்புரிமுழக்கம்விம்மின
தோட்டிடைக்கருங்கயறுள்ளுநீரன
கோட்டகமல்லனகுன்றம்போல்வன. (௯௯)

எண்டருசிகரத்தவிலங்குபானுவின்
மண்டலமதியுடன்வலஞ்செய்கிற்பன
கண்டவர்வியப்பச்செங்கனகமாவன
விண்டலைத்தொடுவனமேருவல்லன. (௧௦௦)

வச்சிரமிழைத்தனமணியின்வைத்தன
பச்சையிற்குயின்றனபவளங்†கோட்டின
முச்சகம்விற்கும்வெண்முத்தின்மொய்த்தன
‡கச்சுமல்லனவளங்கனிந்தமாடமே. (௧௦௧)

---

* 'செவ்விய' என்று பிரதிபேதம்.
† 'கொட்டின' என்று பிரதிபேதம்.
‡ 'கச்சமில்லன' என்று பிரதிபேதம்.

தாமவார்மழையொடுந்தவழ்ந்துசூழ்வன
மாமணிபுனைந்தனமடந்தைமார்முகத்
தாமரைமலர்ந்தனதவளமாடங்கள்
கோமறுகிடந்தொறுங்கோடியென்பவே. (௧0௨)

பூசல்வண்டுழுகுழற்பொன்னனார்பயி
றேசுலாமேனிலை* துடக்குஞ்செவ்விய
மாசில்வெண்டுகிற்கொடிவானநீணதி
வீசுதெண்டிரையெனவிளங்கித்தோன்றுமே. (௧0௩)

நங்கைமாரோதிக்குநாணியோவலாற்
சிங்கவேறனையவர்கொடைக்குத்தேம்பியோ
தங்கணீர்பனிப்பபோலசும்புதண்ணென
மங்குன்மேனிலையலமந்துதாழுமே. (௧0௪)

பளிங்குபோழ்ந்தடுக்கியபசும்பொற்பித்திய
விளிம்புமுத்தெறிந்தவேதிகையமேனிலைத்
தளங்கள்விண்டொடுவனதாவில்பல்வள
மளந்தறிவதற்கெழுமமைதியொப்பன. (௧0௫)

சுரர்க்கமுதளித்தமாறாயபூசுர
வர்க்கும்வண்கடங்கொடுவழங்கவுய்த்தெனப்
பரக்கும்வேதியர்மணிவாசற்பாங்கெலா
நிரப்புபூரணகும்பநிலவித்தோன்றுமே. (௧0௬)

புடைதவழ்மதிமிசைப்பொன்னனார்முலைக்
கொடிபடவெழுதியகொண்டகோலினைக்
கடைபுடைத்திடுந்தொறுங்கதுவுநானநீ
ரிடைகசிந்ததைமறுவென்னும்வையமே. (௧0௭)

கன்னலுங்காய்க்குலைக்கமுகும்வாழையும்
பொன்னினுமணியினுங்குயின்றபொற்பின
முன்னியநவமணிமுகப்பிற்சேர்த்தன
துன்னியவச்சிரத்தூணந்தோறுமே. (௧0௮)

சந்திரகாந்தமேற்றளங்கள்காலுநீர்
மைந்துடைமன்னவர்வழங்குந்தானநீர்
சிந்துரங்கவுண்மடைதிறந்துபாயுநீர்
முந்தலிற்பாவைமுந்நீரென்றாயதே. (௧0௯)

---

* 'துலங்கும்' என்று பிரதிபேதம்.

பத்திசெய்மணிப்பணியலதுபான்லா
வித்திலத்தாமங்கணிலத்தாழ்வடங்
கத்திகைக்கோதையர்கடியுங்குப்பைபூங்
கொத்துகளல்லதுகுழங்கன்மாலையே. (கக0)

வளையறையனையவாலரிமெண்ணுநீர்
தளையவிழ்தாமரைத்தடங்களாகியே
விளைவயற்பாய்ந்தபின்மிகுந்தவாரிகொய்
*யுளையுலாயமிழ்தெனவுயர்ச்சிசொல்வதே. (ககக)

வேந்தர்தேர்குழித்தவும்விடுத்தவாம்பரி
தாந்தடங்கிளைத்தவுஞ்சமஞ்செய்கிற்பன்
காந்துபன்மணிக்கலங்கடிந்தகுப்பையுஞ்
சாந்தமுமல்லதுதாமமென்பவே. (ககஉ)

மறையொலிவளமனைவள்ளைப்பாட்டொலி
துறைதொறும்பல்லியந்†துவக்குநல்லொலி
கறையடிகலினமாகலிக்கும்பேரொலி
யறைகடலொலியினையடக்குமென்பவே. (ககங)

திருந்தியகல்வியுஞ்செல்வம்யாவையும்
பொருந்திய‡வண்மையாவர்க்கும்பூத்தலா
லிருந்துளார்க்கப்பதியெல்லைவந்தெதிர்
விருந்தலாலரியனவேறொன்றில்லையால். (ககச)

விதுச்சிலாவட்டமும்விதுவும்வேரியங்
கதுப்பும்வந்தயறவழ்காளமேகமும்
புதுக்கடிமகளிரும்புனைந்தபாவையு
மதிப்பதற்கரியனமாடந்தோறுமே. (ககரு)

ஆள்வினைக்குய்ப்புகையாலைத்தீம்புகை
வாள்விழியவர்குழற்கூட்டும்வண்புகை
வேள்வியினெழும்புகைவிரைகொண்மென்புகை
நீளியவானையும்விழுங்குநீர்மைய. (ககசு)

விண்ணினுமகன்றனவிளங்குமேனிலை
யெண்ணினும்பெரியனவீண்டும்பல்வளம்
பண்ணினுமினியனபாடன்மாதரார்
கண்ணினுநெடியனகாமர்வீதியே. (ககஎ)

* 'யுளையவாயமிழ்ததனுயர்ச்சிசொல்வதோ' என்று பிரதிபேதம்.
† 'துவைக்குநல்லொலி' என்று பிரதிபேதம்.
‡ 'வண்ணம்' என்று பிரதிபேதம்.

வேறு.

அந்தணரில்லமெங்குமருந்தவர்மடங்களெங்கு
மிந்திரதிருவினோர்தமேந்தெழிலிருக்கையெங்கும்
பந்தணைவிரலினார்கள்பயிலுமாளிகைகளெங்குங்
கந்தெனத்திரண்டதோளார்கலைபயில்கழகமெங்கும். (௧௧௮)

வண்டுழுகோதையெங்கும்வளைகறங்கோதையெங்கும்
பண்டருபாடலெங்கும்பயிலும்பொற்பாடலெங்கு
முண்டிடுமமலையெங்குமோதனவமலையெங்கு
முண்டகமுகங்களெங்குமுழங்குகமுகங்களெங்கும். (௧௧௯)

ஓதுவேதங்களெங்குமொழிந்தவேதங்களெங்கு
மாதரார்தெருக்களெங்குமாற்றுசந்தெருக்களெங்குஞ்
சூதர்பொற்பணிகளெங்குந்துலங்குபொற்பணிகளெங்கு
நீதிசொல்வளங்களெங்கு*நீத்தபால்வளங்களெங்கும். (௧௨0)

இமையவர்கோயிலெங்கும்யாகமண்டபங்களெங்குஞ்
சிமையமொத்தெழுந்தசோதிச்செம்பொற்செய்குன்றமெங்கு
மமையுறுதோளினல்லாராடல்சாலரங்கமெங்குந்
தமைநிகர்வளமையாளர் தருமவைச்சாலையெங்கும். (௧௨௧)

இன்னநல்வளங்கண்மல்கியிணைதனக்கெங்குமின்றி
மன்னியநல்லூராழிமலர்த்தடமாகவையம்
பொன்னிறக்கமலமாகப்பொருட்டுக்காவிரிநாடாக
வுன்னதில்வாழுநங்கையாமெனப்பொலிந்ததன்றே. (௧௨௨)

## தலமகிமை.

இத்திருநல்லூர்தன்னில்யாதொருதருமமேனும்
பத்துநூறதிகமாகப்பலிக்குமப்பரிசுதன்றாற்
சித்தசுத்தியுமுண்டாகுந்தீயமுப்பகையுந்தீரு
முத்தியினெறிவினாவிமுறைமையினடையுமன்றே. (௧௨௩)

சோருநீரருவியொப்பத்துப்புவார்ந்தொழுகவின்ப
மாருமுப்பழமுநாறுமுதிரையுமருகிற்சேர்த்தி
யோருவைநிகர்ப்பநல்கும்வியன்பலநல்லூர்தன்னி
லோரவிழளித்தற்கொவ்வாதென்னின்மற்றுரைப்பதுண்டோ. ( )

பற்பலபருவமெல்லாம்பட்டினிவிட்டும்பார்த்தோர்க்
கற்புதமாகச்செய்தற்கருந்தவம்புரிந்துமெய்தும்
பொற்புடைப்பலங்கணல்லூர்ப்புனிதனைப்போற்றல்செய்தோர்
நற்பகல்வசித்தார்க்குண்டாமென்னில்யானவிலற்பாற்றோ. (௧௨௫)

* 'நீத்தயில்வளங்க' ளென்று பிரதிபேதம்.

சுந்தரநீர் தர்க்கன்பாற்றூபிகோபுரங்களாதி
யந்தமில்பணிகளாற்றியாலயங்கண்டதூயோ
ரிந்திரசெல்வமெய்தியெண்ணில்பல்லூழிவைகிச்
சந்திரமௌலிசெய்யதாண்மலர்நீழல்வாழ்வார். (கஉசு)

தீர்த்தநீர்வாவிதொட்டோர்தெளிந்தநீர்க்கூவல்கண்டோ
ரார்த்தருக்குறையுளுய்த்தோரன்னசாலைகள்சமைத்தோர்
பார்க்கரனனையசோதிப்பனவருக்கிருக்கைநேர்ந்தோர்
நீர்க்கடலுலகாண்டும்பர்நெடும்பகலாள்வரன்றே. (கஉஎ)

நாலுதிக்கவரும்போற்றுநல்லூரராண்டாருக்கன்பர்
லாலயம்புதுக்கினோர்களணிவிழாநடத்தினோர்கள்
காலமூன்றினுமெய்ப்பூசைகனிவுடன்புரிந்தமேலோர்
ஞாலமுற்றாண்டுபின்னர்நம்பனதுலகில்வாழ்வார். (கஉஅ)

தூசுநல்லனங்களீந்தோர்தூயபட்டாடையுய்த்தோர்
மாசையான்மணியாற்செய்தவண்பணிவழங்குநல்லோர்
நாசமில்லாதநல்லூர்நம்பனதருளினாலே
காசினியாண்டுபின்னர்க்கற்பகநாட்டிலாள்வார். (கஉகூ)

கன்னியர்நூற்றநூலாற்கடிகொடார்மரையினூலாற்
றுன்னியதிரியினெய்சொரிந்துதீபங்கணல்லூர்
முன்னவன்கோயிலெங்குமுறைமையினேற்றுந்தூயோர்
தன்னிகர்ஞானமெய்திதற்பரப்பொருளைச்சார்வார். (கஙo)

வெண்டயிர்நறுநெயான்பால்விளம்புமைவகையதாகக்
கொண்டிடு*மமிர்தந்தூயகொழுங்கனிச்சாறுசெந்தேன்
றண்டுதலிக்கன்னற்சாறுநல்லிளநீர்வில்வத்
தொண்டளிர்க்குழம்புசாலியோதனமூன்றையினூட்டி. (கஙக)

குங்குமக்கலவைச்சந்தக்குழம்பவிடேகித்தன்பாற்
பொங்கொளிப்பளிதம்வாசப்புழுகுநெய்லேபனஞ்செய்
தங்கணர்சுந்தரேசர்க்கணிபலசாத்தினோர்க
ளெங்கணும்புகழவைகியின்பவீடடைவரன்றே. (கஙஉ)

இண்டையுஞ்சூட்டும்பைந்தோடேந்துபூந்தாருஞ்சாத்தி
யண்டர்நாயகனுக்கன்பாலணிநலம்புனைவித்தோர்க
ளெண்டிசைவளாகமெல்லாமியல்புளியொருகோலோச்சி
மண்டகன்வாழ்நாளெய்திமுத்தியுமுறையிற்சேர்வார். (கஙங)

---

* 'மிரத' மென்று பிரதிபேதம்.

ஏகனிரவலிகைகள்சாலியோதனவகைகளின்பப்
பாகுறுமபூபவர்க்கம்பாங்குடனிவேதித்தோர்க
டோகையயோர்பங்கினெங்கோன்சுரந்தபேரருளினாலே
போகமும்வீடுமெய்திப்புண்ணியர்போற்றவாழ்வார். (கஙச)

கொம்பென நுடங்குஞ்செம்பொற்கோற்றொடியுமையாளோடு
நம்பனுக்கன்பாவாசநறும்புகையேந்துநல்லோர்
பம்புநீர்க்கடலந்தானைப்பார்முழுதாண்டுபின்ன
ரும்பர்நாடெய்திமீளாவுயர்கதிசேர்வர்மாதோ. (கஙரு)

நாடகக்கணிகைமாதர்நம்பனுக்குவந்தவாறே
பீடுசால்வாகனங்கள்பிறங்குநீடாழித்திண்டேர்
நீடுவான்கவிகைசெம்பொனெடுங்கொடியாதியுய்த்தோர்
வீடுசேர்ந்துய்வரித்தமேதினியாண்டுமாதோ. (கஙசு)

குடம்புரைசெருத்தனல்லான்கொய்யுளைப்புரவிவேழந்
தடம்படுவிளையுளார்திசவுந்தரநாதர்க்கீந்தோ
ரிடம்படுஞாலமெல்லாமேத்தவீற்றிருந்துபின்ன
ருடங்குதஞ்சுற்றத்தோடுமும்பர்நாடெய்திவாழ்வார். (கஙஎ)

மேதகுசிறப்பின்மிக்கவிழாவணிசேவித்தோர்க
டீதுதீர்பிரதோடத்திற்றெரிசனம்புரிந்தமேலோர்
நாதனையினையவாயநற்றினத்திறைஞ்சினோர்கள்
பூதலத்தரசாய்வைகிப்புரந்தரன்போகந்துய்ப்பார். (கஙஅ)

சாந்திராயணமுன்பாகச்சாற்றுநல்விரதநல்லூர்ப்
போந்தனுட்டித்தமேலோர்புண்ணியனருளினாலே
வேந்தர்தம்வேந்தராகிமேதினியாண்டுபின்னர்ப்
பூந்துணர்த்தருநாடெய்திப்பொருவருமுத்திசேர்வார். (கஙகூ)

வேனில்வந்திறுத்தமாந்தர்விடாயொழித்திடுதற்கேற்ற
பூநறுந்தண்ணீர்ப்பந்தர்புதுமலர்நந்தவான
மூனமிலன்பாற்கண்டோருலகில்வீற்றிருந்துபின்னர்க்
கானமலிபசும்பொன்பூத்தகற்பகநீழல்வாழ்வார். (கச0)

சுந்தரநாதர்வைகுந்தூயநல்லூரினங்க
ணந்தணராற்றும்வேள்வியனைத்தும்வண்புரவிமேதந்
தந்திடுபலன்கணல்குமெண்ணிலத்தலத்தின்மேன்மை
யெந்தையேபுகல்வதல்லால்யாவரேயிசைக்கவல்லார். (கசக)

தெண்புலத்தவரைநோக்கித்திருத்தகுநல்லூரங்க
ணன்புடன்குடங்கையானீரள்ளியோர்முறையுய்த்தாலு
மன்பெருநூல்கள்சொன்னமரபுளிவழாதுசெய்யு
மின்பமதடைவரென்றால்யாரதன்பெருமைசொல்வார். (கசஉ)

பாலின்மாநதியாடிப்பரம்பர
ஞலுங்கூத்துடையம்பலஞ்சேவித்தே
சேலுலாம்பொன்னித்தீர்த்தம்படிந்துராய்
ஞாலம்போற்றுநல்லூரைவந்தெய்திஞன். (௧௮)

ஆதியாதிரைநாளஃதாதலால்
வேதவேதியர்மிக்கொருங்கெய்திஞ
ரேதமின்றியற்றுந்திறமியாவையும்
போதமொன்றிலான்ருனும்புரிந்தரோ. (௧௯)

கோயிலெய்திக்குடந்தம்பட்டெம்பிரான்
மேயசன்னிதிவேட்டுவன்சார்ந்துபுக்
காயமூலபிலத்துடனண்ணலை
நேய்முற்றவர்போனின்றுநோக்கிஞன். (௨0)

நோக்கியங்கணுவலரும்வைபவம்
பாக்கியம்மிதுவென்றவன்பார்த்தொரு
தாக்குங்கன்னறணப்பிலனுகிநின்
றேக்கழுத்தொடவ்வெல்லையினீங்கிஞன். (௨௧)

நீங்கிமூன்றுதிவசமந்நீணகர்ப்
பாங்கில்வைகியப்பட்டிமவேடத்தான்
ருங்குதன்னுடருண்விடுத்தான்விட
வாங்குநண்ணியவன்செவியூடரோ. (௨௨)

நாதன்றிவ்வியமந்திரநன்குற
வோதல்செய்தனஞேதலுமற்றவ
னேதநீங்கும்விமானம்வந்தெய்தலு
மீதிவர்ந்துயர்வெள்ளிவெற்பெய்திஞன். (௨௩)

இயக்கர்கின்னரர்யாழிசைவல்லவர்
மயக்கமின்றியவானவர்தானவர்
புயற்குநேர்பவன்புண்டரிகத்திஞேன்
கயற்கண்மாதுமையாவருங்காணவே. (௨௪)

ஐயனெய்தியவன்னவன்சென்னிமேற்
செய்யகைத்தலஞ்சேர்த்திக்கருணைபூத்
துய்யுமாறுகணுதிபனுயுறு
நையொணுதபதவியுநல்கியே. (௨௫)

நண்ணியங்கள்பலவுநவிற்றபு
பின்னுஞானதரிசியென்றேபெய
ரன்னவற்குக்கொடுத்தனனுங்கது
தன்னைநோக்கியுமையவள்சாற்றுவாள். (உ௬)

இத்திறம்பெற்றதின்னவன்செய்திட
மத்திறம்பகர்கென்னலுமண்ணுறன்
முத்தமென்முலைமொய்குழல்கேட்டியாற்
பத்தருள்ளிவன்போலெவர்பாரின்மேல். (உ௭)

உற்றவாதிரைநாளினுவந்துநா
முற்றுவாழுமுடிவினல்லூர்வயின்
மற்றிஞேனெய்திமாலயன்காணொணாப்
பெற்றிசேரெமைமூலபிலத்தொடு. (உ௮)

கண்டுசேவித்துக்காயமுமவ்வுழி
விண்டுநீக்கினன்வேறெவன்வேண்டுமால்
வண்டுலாங்குழலாயந்தவாய்மையா
லண்டர்போற்றவிவ்வாறளித்தாமரோ. (உ௯)

மூர்க்கரேனுநம்மூலபிலத்தொடு
கூர்க்குஞ்சோதிகுலவியலிங்கத்தைச்
சேர்க்குநல்வளச்செல்வநல்லூரெய்திப்
பார்க்கிலின்னபரிசளிப்போமென்றான். (௩0)

அனையதன்மையையாமேயறிகுவம்
வனைகருங்குழன்மாதுகேண்மோவெனு
முனைவன்கூறலுமுற்றிழைநங்கையுந்
தனையொப்பாமவன்றண்ணளிவாழ்த்தினள். (௩௧)

கற்பமொன்றுகயிலையினற்றவன்
பொற்பவீற்றிருந்தப்புறம்பொய்யிலாத்
தற்பதப்பொருளாயவன்றண்மலர்
நற்பதத்திணைநண்ணியுற்றனரோ. (௩உ)

தெரித்தவிக்கதைசெப்புநர்கேட்குநர்
பரித்தபாதகம்யாவையும்பாழ்பட
முரித்துமூவுலகாண்டுமுறைமையா
லருத்திகூர்சிவரூபமடைவரால். (௩௩)

கிராதமோட்சச்சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-எ௯உ.

பதினாறுவது

## தருமசேனச்சருக்கம்.

---

வேறு.

அரியமாதவரண்ணல்சேவடி
தருமசேனன்முன்றாழ்ந்துவாழ்த்தியே
புரவிமாமகம்புதல்வரோடுறும்
பரிசுசொல்லெனச்சூதன்பன்னுவான். (க)

விரைசெறித்தசந்தனமும்வேழமுங்
கரைதிரைத்தெறிகௌதமிக்கரைப்
* புரையிலாதமர்புரத்தில்வாழரசு
அரைசர்தம்பிரானவனிகாவலன். (உ)

செய்யகோலினன்சிறந்தவெண்குடை
வையமெங்கணுங்கவித்தமாண்பினன்
பெய்யுமாரியேயனையபெற்றிசால்
கையினன்சிலைக்காமனேயனன். (ங)

அறத்தின்வேலியாயருளினாழியாய்
மறத்தின்கூற்றமாய்வாய்மைக்கெல்லையாய்த்
திறத்தின்வெள்ளிலைச்செய்யவேலனாய்ப்
பொறைக்குப்பூமியாய்ப்பொலியும்பொற்பினன். (ச)

எண்ணலார்முடியிடறுந்தாளினன்
வண்ணமாலைசூழ்வாகைவாளின
னண்ணல்யானைபோலமர்செய்தோளினன்
றண்ணந்தாரினன்றருமசேனனே. (ரு)

வார்கடற்புவிமுற்றுமற்றவ
னோருமாழியொன்றுருட்டியாளுநா
ணோருங்கோதமுநீத்தமாதவ
னாரதப்பெயர்முனிவனண்ணினன். (சு)

வந்தயாழ்முனிமகிழுமாண்பினாற்
சிந்தையன்பொடுஞ்சென்றுதாழ்ந்தவன்
முந்துமர்க்கியமுதலயாவையுந்
தந்தொராசனந்தழையவேற்றினன். (எ)

---

* 'புரையிலாதமாபுரத்தில்' என்று பிரதிபேதம்.

இன்றுநீவரயான்செய்மாதவ
மொன்றுசாலுமோவூழியூழியுந்
துன்றுமென்குலத்தொல்லையோரெலா
நின்றுசெய்தவநிலைமையாகுமால். (௮)

இனையநன்னயக்கிளவியெண்ணில
கனைகருங்கழற்காலன்மன்னவ
னனைதுளித்தெனநவிலநாரத
னினைவியாதெனுநீசொல்கென்றனன். (௯)

வீணைமாமுனிதானைமீளவும்
யாணர்வைப்பினனிறைஞ்சியேத்தியே
கோணைவாம்பரிவேள்விகோலுகே
ளுணரீயதற்கருளல்வேண்டுமால். (௧௦)

வேந்தனித்திறங்கூறவீணைகை
யேந்துமாதவனிஃதியம்பினன்
மாந்தர்நாதநின்மைந்தரான்மகம்
போந்தவாமுடித்திடுதிபோலுமால். (௧௧)

என்னநாரதன்சொல்லுமெல்லையின்
மன்னர்மன்னவன்மதிமயங்கியே
பொன்னலங்கொளும்புதல்வரின்மையேற்
கன்னமாமகமாற்றல்யாண்டென்றான். (௧௨)

மைந்தநீபெறும்வாய்மைசொல்லுகேஞ்
சிந்தைநீங்கெனத்தெருட்டிக்கூறிமற்
றந்தமில்புகழரசரேறனுற்
கெந்தைபின்னருமிவையியம்புவான். (௧௩)

சிந்துநீள்கதிர்தீர்ந்தவானமு
மிந்துமண்டிலமிழந்தமீனமு
முந்துசீற்றத்தோனுற்றஞானமு
மைந்தரில்லவர்மனையுமானுமே. (௧௪)

பொற்றதாமரைதுறந்தபொய்கையுங்
கற்றுளோரிலாக்கழகமும்பொரும்
வெற்றியொன்றிலாவேலும்பாலரைப்
பெற்றுறாதவர்பீடுமொக்குமே. (௧௫)

மிக்கநீரிலாவெறியபூமியுந்
தொக்கபோதிலாச்சோலைச்சூழலு
மிக்குநெல்விளைவிகந்தசெய்களு
மக்களையிலாமனையுமானுமே. (௧௬)

அங்கிவேட்டுணவந்தணாளரு
மங்கலத்திருவாங்குமாதருந்
தங்குநீதியிற்றவறும்வேந்தருஞ்
செங்கைச்சேயுறூர்திருவுமானுமே. (௧௭)

ஆதலான்மகவடைந்துற்றவர்
பூதலத்திடைப்புன்கணாளரே
யேதநீங்கநின்னெண்ணமுற்றுமா
ஞேதுவாமெனவுறுதியோதுவான். (௧௮)

பொன்னிமாநதிப்பொருதென்கூலத்திற்
றுன்னுசோதிகூர்சுந்தராசல
மன்னுமாங்கதன்மருங்கிற்றாயன
பன்னுதீர்த்தங்கள்பலவுமுண்டரோ. (௧௯)

ஐந்துவண்ணமாமரியலிங்கமொன்
றிந்தமாநிலமேத்தவைகுமான்
முந்துலிங்கத்தின்மூலவான்பிலம்
பந்திபந்தியாய்பாங்கிற்றோன்றுமால். (௨0)

அந்தமூலவான்பிலத்தையன்பினு
லெந்தைதன்னொடுமிறைஞ்சியேத்துவோர்
முந்துசித்திகண்முறையினெய்தியே
பந்தமின்றியபதமுஞ்சேர்வரால். (௨௧)

சத்தசாகரந்தனக்குப்பாவகன்
வித்தகத்திசையதன்கண்வெய்யவ
னுத்தமத்தடமொன்றுண்டாலதின்
மத்தயானையாய்மனைவிதன்னொடும். (௨௨)

பூசநாள்வரும்பூரணைதனி
னேசமாகநீநெறியின்மூழ்கியே
* மாசையீந்துராய்மத்தியானத்திற்
காசில்வேதபுட்கரிணியாடியே. (௨௩)

* 'மாசவிந்துராய்' என்று பிரதிபேதம்.

கன்னியந்தடத்தோடுங்காதலான்
மன்னுங்கோயின்மூவலஞ்செய்துட்புகுந்
தன்னைமாதுமையணங்கொடையனைப்
பொன்னின்மாமலர்பொழிந்துபோற்றியே. (உச)

மூலவான்பிலமதனைமுந்துறக்
கோலக்கண்மலர்குளிரநோக்கியே
யேலவார்குழலிறைவிதன்னைவை *
வேலின்மன்னவமீண்டும்போற்றியே. (உரு)

பிறைமுடித்தபெம்மானுக்கன்பினாற்
றிறல்கொள்வேந்தநீசிறப்புஞ்செய்தியே
லிறைவனுண்மகிழ்ந்திலவச்செய்யவாய்
முறையின்மக்கண்மூவரையளிப்பனால். (உசு)

அந்தமைந்தராலசுவமேதமுஞ்
சிந்தையன்புறச்செய்துமுற்றுவாய்
மைந்தனேயெனவகுத்துமாதவன்
புந்தியார்தரப்புசித்துப்போயினான். (உஎ)

வீணைமாமுனிவிடுத்துப்போயபின்
கோணைமாகளிற்றுழவன்கோற்றொடி
மாணலந்தருமனைவிதன்னொடும்
பூணுநூற்புரோகிதரும்போதவே. (உஅ)

சோணைமாநதிமுதலதூநதி
யாணர்வண்புனலெவையுமாடிப்போய்த்
தாணுவங்கியஞ்சையமேத்துபு
கோணிலாமுதுகுன்றம்போற்றியே. (உகூ)

தடங்கொள்காவிரிதன்னிலாடிவண்
குடந்தைமாநகர்கும்பிட்டேத்தியே
மடந்தைபங்கினன்வாழுஞ்சுந்தரத்
தடங்கொள்வெற்பணித்தாகச்சார்ந்தனன். (கூO)

சார்ந்துமன்னவன்றலையினாற்பணிந்
தார்ந்தசிந்தையினன்புவட்டெழச்
சேர்ந்துசூரியதீர்த்தமூழ்கினான்
வார்ந்தகூந்தலின்மனைவியோடுமே. (கூக)

* 'இறைவிதன்னையும்' என்று பிரதிபேதம்.

அந்தணாளருக்களவிலாநிதி
சிந்தியத்தடந்தீர்த்தப்பாங்கரிற்
பந்தரோடுநீள்பன்னசாலையுந்
தந்துதீயையுந்தாபித்தானரோ. (௩௨)

பின்னையன்னவன்பிரமதீர்த்தத்திற்
பன்னிதன்னொடும்பனவர்தம்மொடுந்
துன்னியாடுதூயவன்சொலு
மன்னவாறெலாமடைவினாற்றினான். (௩௩)

அரசனாற்றலுமரவுந்திங்களும்
விரவிச்சூடியவேணிநாயகன்
கருணைகூர்ந்துமுக்காதன்மக்களை
யொருவயிற்றொருங்குயிர்ப்பநல்கினான். (௩௪)

அண்ணல்யானையானன்புமீக்கொள
வெண்ணெய்நல்விழாவினிதியற்றுபு
நண்ணுமேனையசடங்குநன்குறப்
பண்ணிநம்பனைப்பணிந்துபோற்றியே. (௩௫)

உறுதியக்கினிவண்ணனூழியு
மிறுதியின்றியவேமவண்ணனோர்
மறுவில்ரத்தினவண்ணனென்றுபேர்
சிறுவர்மூவர்க்குஞ்செப்பினானரோ. (௩௬)

செப்பிவேந்தனுந்தெரிவைபங்கினற்
கொப்பிலாதனசிறப்புளாற்றியே
யிப்பெரும்புவியினிதினேத்துமா
றப்பதிக்கணுற்றமர்ந்திட்டானரோ. (௩௭)

அரசன்சில்பகல்செல்லவன்பினாற்
புரவிமாமகம்புதல்வர்தம்மொடும்
விரைவினாற்றுவான்வேதவேதியர்க்
குரைசெய்தன்னவரோடுமுற்றினான். (௩௮)

சுரபிகோடிகள்சுருதிவாணருக்
கரசனல்கியேயமலற்கன்பினாற்
பரவுபன்னிருபதிகொடுத்தருளி
விரவுபொற்பணிவிழைவினுய்த்தரோ. (௩௯)

முத்தமாலையும்முழுத்தசோதிய
வித்துருமத்தால்விளைத்தமாலையும்
பத்திபத்திசேர்பதுமராகத்தின்
கொத்துமாலையுங்கொடுத்துக்காவலன். (௬0)

பொன்னந்தானையும்பூம்பட்டாடையு
மின்னுநித்திலம்விளிம்புபோக்கிய
வன்னச்சேலமும்வகைவகைபெறப்
பன்னுசித்திரப்படமுமீந்தரோ. (௬௧)

செம்பொன்வள்ளமுஞ்சிறந்தவெள்ளியி
னம்பொன்வள்ளமுமனையவேனவும்
பைம்பொன்வாகனம்பலவும்பாங்கினு
லும்பரும்பருக்குதவிப்பார்த்திபன். (௬௨)

அண்ணலார்தமக்கன்புமீக்கொள
வெண்ணிலாப்பணியின்னவாறுசெய்
துண்ணயந்துநல்விழவுமுய்த்தவன்
விண்ணவற்குத்தென்மேற்குத்திக்கினில். (௬௩)

செருவவாளிமூன்றிடையிற்றிவ்விய
வுருவிலிங்கமாங்கொன்றுதாபித்துத்
தருமதீர்த்தமென்றொருதடாகமுந்
சுருதிவாய்மையாற்றொட்டிட்டானரோ. (௬௪)

மகரத்திங்களில்வாய்ந்தபூசநாட்
பகருமத்தலம்படிந்தமேலவர்
புகரனைத்தையும்போக்கிப்பொன்றொணு
நிகரின்மேற்கதிநெறியினெய்துவார். (௬௫)

மிக்கசெம்பொனும்வீறுவெண்பொனு
மக்குளம்படிந்தறிஞர்க்கீந்துளோர்
தொக்கவக்கினிட்டோமமேதகு
தக்கவான்பயன்றனையுமெய்துவார். (௬௬)

இடபத்திங்களினெய்துபூரணை
தடமதிற்படிந்தாங்குத்தாபித்த
கடவுளைவலங்கனிவிற்சூழ்வந்தோர்
புடவிசூழ்பயன்பொருந்தவாழ்வரால். (௬௭)

நேசமுற்றியானினைந்துபற்பல
பேசலென்கொலாம்பின்னுகன்னுறை
மாசில்சுந்தரசயிலம்வாரிசூழ்
காசினிக்குள்வண்கயிலையாகுமால். (சஅ)

விளம்புமிக்கதைபகருமேலவ
ருளங்கனிந்துகேட்டுருகுந்தூயவர்
வளங்கொள்பூதலமரபினுண்டபின்
களங்கனிக்களன்கயிலைசேர்வரால். (சக)

தருமசேனச்சருக்கம் முற்றிற்று.
ஆ திருவிருத்தம்-அகக.

## பதினேழாவது
## தீர்க்கதுண்டச் சருக்கம்.

வேறு.

அலகில்கேள்வியருந்தவரன்பினு
லுலகமேத்துமுறுதவச்சூதனைத்
திலகமாகியதீர்க்கதுண்டன்செயற்
குலவுமாக்கதைகூறெனக்கூறுவான். (க)

அளக்கருண்டவருந்தவன்கற்பினிற்
றுளக்கமின்றியதூமொழிதன்னுடன்
களக்கனிக்களத்தானுக்கீசானத்தின்
விளக்கமெய்தியவேதியர்சூழவே. (உ)

பன்னசாலையமைத்துப்பரிவினு
லன்னநல்லூரமர்ந்தனனந்தநாட்
டின்னுதிங்கள்சுடரவனேடெய்தி
மன்னுவைகலின்வாயதவான்பலி. (ங)

இடுதனேக்கியிருந்தஒதார்வாயதஞ்
செடிகொண்மென்சிறைத்தீர்க்கதுண்டன்னென்ப
படியிற்பேர்பெறும்பான்மையதப்பலி
கடிதின்வவ்விக்ககனத்தெழுந்ததால். (ச)

எழுந்தென்றிசையேகியதேகனு
மழுந்தவவ்வியவப்பலிதன்னையோர்
செழுஞ்சிறைக்கொடிசென்றுதொடர்ந்திடப்
புழுங்கிவீழ்த்திப்புறம்புக்கதாமரோ. (ரு)

வீழுமப்பலிவீதியினெய்திய
தாழுழப்பிற்றளர்ந்தவொராதுலன்
காழிலாதகடிஞைக்கலத்தினி
லூழின்வீழ்ந்ததுவீழவுவந்தவன். (சு)

எந்தைநல்லருளாலிஃதெய்திய
துய்ந்தனம்மினியென்னவொருங்குட
னந்தவன்னத்தையாழ்புனலோடளாய்ச்
சிந்துரூதருந்திப்பசிதீர்ந்தனன். (எ)

பலியைவீழ்த்திப்பறந்தப்புறஞ்செலு
மொலிசெய்காகத்தையுற்றவொர்வேட்டுவன்
வலிதினெய்தனனெய்தலுமற்றது
மெலியமண்ணிடைவீழ்ந்ததுவாமரோ. (அ)

வெள்ளையானைவிதிமுறைதாபித்த
தெள்ளுசோதிச்சிவலிங்கமேற்றிசைத்
துள்ளியாருயிர்சோர்ந்ததுசோர்தலு
மெள்ளொணாதவிமானம்வந்தெய்திற்றால். (கூ)

முத்தநீள்வடந்தூக்கிமுறைமையால்
வித்துரும்மவியன்கானிறுவிய
தத்துசோதியத்தாவில்விமானத்தின்
வித்தகத்திமையோர்புடைமேவவே. (கዐ)

வீசுசாமரைவிண்ணகமாதரார்
நேசமாகநெறியினிரட்டினர்
வாசமாமலர்தூவிமணிமுடித்
தேசுலாமிமையோர்திசைபோற்றவே. (கக)

தீற்கதுண்டன்சிறந்தமெய்த்தேவனாய்
மேற்கொள்சோதிவிமானத்தின்மீதிவர்ந்
தேற்கும்வண்ணமிருங்கயிலைப்புறம்
பாற்கணங்கொணர்ந்தேகப்படர்ந்ததே. (கஉ)

படர்ந்துசென்றுபரன்பதம்போற்றுபு
திடங்கொள்காகஞ்சிறந்தயனிற்றலு
*நடங்கொணுதனயப்புடனேக்கியே
தொடர்ந்தகாதலினின்னணஞ்சொல்கின்றான். (கங)

பொன்னுலாகம்பொருவினல்லூரினீ
யன்னதானமியற்றுமமைதியான்
மன்னுகின்றகணங்கட்குமன்னுய்த்
துன்னிவாழ்கெனச்சொற்றனன்சொற்றலும். (கச)

அம்பொற்சேவடிபோற்றிபவணின்ற
வும்பராரையவோதுகவத்திற
மிம்பர்காட்டிலிதுசெய்தவாறென
கம்பனேக்கிநகைத்ததுசொல்லுவான். (கரு)

பலிகவர்ந்துபடரவொர்வாயத
மெலிவுசெய்தலும்வீழ்த்தவியன்பலி
கலியினுனொர்கடிதைக்கலத்தினி
னலியுமாறின்றிநன்குறவுற்றதே. (கசு)

உற்றபிண்டத்தையுண்டவன்றீப்பசி
முற்றுநீங்குமுறைமையினுலிந்தப்
பெற்றியெய்தியதாலெனப்பிஞ்ஞகன்
சொற்றலோடெந்தொழுதுவியந்தனர். (கஎ)

ஆதலாற்பரனல்லூரதன்வயிற்
காதலாலன்னங்காண்வரவீந்துளோர்
கோதிலாப்பயனேக்குறித்துன்னியா
னேதுமாறெளிதோவெனவோதுவான். (கஅ)

தந்திபோற்றியதாணுவின்சன்னிதி
முந்துறக்கொடிவீழ்ந்தமுறைமையா
லந்தத்தானமகன்றடமாகுபு
சிந்துசூழ்புவிபோற்றச்சிறந்ததே. (ககூ)

தேவனுய்க்கொடிசென்றதிறத்தினுன்
மேவுமத்தடமேதினிமேலென்று
மோவில்கேள்வியுறுதவத்தந்தணீர்
தாவிறேவதீர்த்தம்மெனச்சாற்றுவார். (உ0)

---

* 'அடங்கொணுதவசிப்புடனேச்கியே' என்று பிரதிபேதம்.

ஆண்டுதோறுமதிலெய்தியன்பினுற்
சேண்டலம்புகழ்தீர்க்கதுண்டன்படிந்
நீண்டுதர்ப்பணமாதியெவைகளுங்
காண்டகுந்திறஞ்செய்துகனிந்தரோ. (உக)

ஐயனைந்தெழுத்தோதியவணமர்ந்
துய்யும்வண்ணமுவப்புடன்போற்றியே
செய்யசோதிவிமானத்துச்சென்றுமான்
கையன்வாழுங்கயிலையைச்சேர்வனால். (உஉ)

மருவுதையமாவாசையினத்தடத்
திருகுமன்பினுவப்புடனுடியே
பொருவிலாதன்னதானம்புரிந்துளோர்
தெரிவைபாகன்கயிலையைச்சேர்வரால். (உங)

சொற்றவைகலிற்றுய்தடமாடுபு
கற்றைவேணிக்கசேசுரன்சன்னிதிக்
குற்றுத்தீபவுகளங்களேற்றினோர்
மற்றவானவன்வான்பதஞ்சேர்வரால். (உச)

இப்பெருங்கதைகேட்குமியல்பினோர்
செப்புகின்றதிறனுடைமேலவ
ரொப்பில்யோகமுலப்பிலவெய்திப்பி
னப்புலாஞ்சடையானடிசேர்வரால். (உரு)

தீர்க்கதுண்டச்சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-அஙசு.

பதினெட்டாவது

## எக்கியகுத்தச்சருக்கம்.

### வேறு.

சொற்றவந்தீர்க்கதுண்டன்றூமிலாக்காதைகேட்டோர்
நற்றவவணிகனுய்ந்தகாடருஞ்சரிதையிப்பா
லுற்றுநீகூறுகென்னவுறுதவர்வினவலோடுந்
தெற்றெனச்சூதனுய்ந்துசிந்தையன்பொழுகச்சொல்வான். (க)

சுந்தரகிரிக்கீசானத்தாயநற்றிசையினங்கண்
கந்தமாபுரமதென்னக்காவிரிவடக்கதாக
வந்தமில்பதியொன்றோங்குமப்பதிமேன்மைதன்னை
யெந்தையேயுரைப்பதல்லால்யாவரேயுரைக்கவல்லார். (௨)

அத்தகைநகரினங்கணவுணரையடர்த்தவேலோற்
குத்தரதிசையிற்கூபமொன்றுளததனிலாடிற்
குத்திரமெவையுநீங்குங்குமரகண்டமும்போமாங்கே
சத்தியவிரதன்சித்திசார்ந்ததோர்தடமுமுண்டால். (௩)

பாவகன்றிசையினேர்வண்பலர்சின்கீழ்ப்*பிரமதீர்த்த
மேவாவிளங்குமந்தமேதகுபதியின்வாழ்வோன்
றூவிலாவணிகர்கோமான்றனபதியனையசெல்வ
னேவுமாறெக்யருத்தனெனுமபிதானமுற்றோன். (௪)

பரமனாதிரைநன்னாளிற்பண்டங்களெவையுங்கொண்டு
மருவியநல்லூரெய்திவாணிகஞ்செய்வானெண்ணிப்
பிரமதீர்த்தத்தின்கீழ்பாற்பிறங்குமப்பண்டமெல்லா
மொருமையிலுய்த்துக்காவலோம்பினனுவகைபூப்ப. (௫)

விடர்பலரோடுங்கூடிவினோதங்களெவையுஞ்செய்து
மடநடைமடக்கைநல்லார்வனமுலைப்போகம்வேண்டி
நடனமூர்த்திக்குமுன்செய்நாடகம்பார்க்கச்செல்வான்
றடவரையுயிர்த்தபாவைசன்னிதிசாரவந்தான். (௬)

வந்தவனாங்குவிஞ்சைமாதவர்பலருங்கூடிச்
சிந்தனைசெய்துகூறுந்தீர்க்கதண்டன்புராணம்
புந்தியின்மகிழ்ச்சிகூறப்பொருள்சிலவினவியன்னோ
னந்தமிலந்தணாளரடிதொழுதகன்றுமீண்டான். (௭)

படங்குடிலதனுட்புக்குப்பண்டங்கள்பலவுநோக்கி
யிடம்பெறுகலத்தினேந்துமினியபாலடிசிலுண்ண
வடைந்தனனயிலுங்காலையன்னமன்னவன்கண்டத்தின்
மிடைந்திடவுடலஞ்சோர்ந்துவீந்தனன்கணத்துமாதோ. (௮)

வீதலுஞ்சிவகணங்கள்விமானத்தினவனையேற்றிப்
பூதலத்தெவரும்போற்றப்பொன்னகரிமையோர்சூழ
நாதன்வாழ்கயிலைவெற்பினண்ணினர்நண்ணக்கால
தூதருமதனைநோக்கித்தொழுதுதம்மிறைக்குச்சொற்றார். (௯)

* 'பரமதீர்த்தம்' என்று பிரதிபேதம்.

சொற்றலுங்கூற்றுமஞ்சித்துணுக்கமுற்றமலனுற்றும்
பெற்றியாரறிவரென்னுப்பேசித்தன்னகரமுற்றான்
மற்றவன்றன்னையீசன்வருகெனவருளித்தன்போ
லுற்றதோருருவமன்னோற்குதவினனுவகைபூத்தான். (க0)

பண்டங்கள்பகரவந்தோன்பண்ணவன்சரிதைகேட்டுக்
கொண்டனன்வடிவமம்மாகுழகன்போலென்றுசொன்னாற்
றெண்டர்தஞ்செயலுநல்லூர்த்துளக்கின்மேன்மையுமெங்கோமான்
றண்டலிலருளும்யாரேசாற்றுதல்புரியவல்லார். (கக)

ஆதலாவினையகாதையன்புடன்வினவுநல்லோ
ரோதநீர்க்கடலந்தானையுலசெலாமினிதினாண்டு
வேதனுமுகுந்தன்றானும்விண்ணவரெவரும்போற்ற*
நாதனார்தாளினீழனண்ணிவீற்றிருப்பர்திண்ணம். (கஉ)

எக்கியகுத்தச்சருக்கம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம்—அசஅ.

---

## பத்தோன்பதாவது

# கோவிதாரத்துவசச்சருக்கம்.

---

வேறு.

முண்டகத்தவிசின்விரிஞ்சனையனையமூதுணர்மாதவரெவரு
மெண்டிசைவளாகமுழுவதும்புரப்போனியற்றமிழ்நாட்டினுக்கிறைவன்
றண்டமிழ்முனிவன்வைதவச்சாபந்தணந்தமைசாற்றுகவெனலுந்
துண்டமாமதியமுடித்தவன்பாதந்தொழுதுசூதனுந்தொகுத்துரைப்பான்

சீலமாதவந்தானைந்தழனுப்பட்சேர்ந்துசெய்கொள்கைபெற்றுள்ளோன்
காலவனென்னும்பெயரினன்செழுநீர்க்கவுதமிக்கரையினிலுறைவோ
னேலவார்கூந்தன்மனையொடுமேவியில்லறமியற்றுமக்காலை
ஞாலமுற்றேகிவருந்தெய்வத்துதியாநாமனோர்முனிவனுங்குற்றான். (உ)

உற்றமாமுனியையெதிர்ந்துமற்றன்னோனுவப்பினாற்பாத்தியமுதல
பெற்றியினுதவியாசனத்திருத்திப்பிறங்குமாதித்தியம்புரிந்து
கற்றவரிருவராளுவளாயுறையுங்காலையில்யாங்குச்சென்றுற்றாய் [ல். ‘ரு)
தெற்றெனப்பகர்தியென்றவனுரைப்பத்திகழ்தெய்வத்துதியுஞ்செப்புவனு

---

* ‘போற்று’ என்று பிரதிபேதம்.

வடாதுகேதாரந்தொடங்கியெம்பெருமான்வாழுமெய்த்தலமுமத்தலத்திற்
றடாகமுநதியுமோடையுமுதலதண்புனற்றீர்த்தங்களெவையும்
விடாதுசென்றாடிமீண்டனனென்னமேதகுகாலவனேக்கிக்
கடாவுதல்புரிந்தானப்பெருங்காதைகட்டுரைசெய்கெனமாதோ. (௪)

போற்றுகேதாரத்திருமலையதனிற்புட்கரங்காசிமாநகரி
னேற்றுயர்கொடியோனருளென விளங்குமியன்மணிகன்னிகைதீர்த்த
நாற்றிசைபகரும்*ப்ரயாகையினதன்கணெரிபுனற்றிரிவேணிதீர்த்த
மாற்றல்சால்கயையிற்றென்புலவாணரரும்புனற்றீர்த்தமற்றுமால். (௫)

வயங்கலம்புசத்தின்வன்னிநற்றீர்த்தமணிகூடமென்னுமத்தலத்தி
னயங்கெழுதிரிபுட்கரச்செழுந்தீர்த்தநாடுசெத்தாரணியத்திற்
பயங்கெழுபிரமதீர்த்தம்பொன்முகரிபரவுகாளத்திமால்வரையின்
வியந்திடுவளங்கூர்ப்ரபாசமற்றதன்கண்மேதகுவருணமெய்த்தீர்த்தம். ()

மாளவமதனிற்சூரியதீர்த்தம்வடாரணியத்தலமதன்கட்
கோளுலாங்கதிர்வேற்குகனெடுந்தீர்த்தங்குலவுசீர்க்காஞ்சிமாநகரிற்
றாளதாமரைகளேடவிழ்த்தலருஞ்சருவதீர்த்தஞ்சிதம்பரத்திற்
பூளைவேணியன்றனருளெனப்பொலியும்புகழ்ச்சிவகங்கையாந்தீர்த்தம். ()

பரவுவெண்காட்டின்முக்குளதீர்த்தம்பரமன்சாயாவனமதன்க
ணுரவுநீர்ப்பொன்னிதடங்கடலதனுளுற்றிடுஞ்சங்கமதீர்த்தங்
கருவினையகற்றுமிடைமருததன்கட்காருண்யாவமிர்தநற்றீர்த்தந்
தரைபுகழ்கும்பகோணமற்றதன்கட்டண்புனன்மாமகதீர்த்தம். (அ)

மதுரையிற்பொற்றாமரைராமேச்சுரத்தின்மறிகடற்பொருதனுக்கோடி
முதுதமிழ்மலயத்தடவரையதன்கண்முற்றெறிதரங்கநீர்ப்பொருனை
புதுமலர்ச்சோலையவ்வரைப்பாங்கிற்பொழிபுனலத்திமாதீர்த்தங்
கதிர்விடுஞ்சுடர்வேற்செழியனன்னாட்டிற்கரைபொருவைகைமாநதியே. ()

வஞ்சுளேசுரத்தின்மேற்றிசையதனில்வயங்கொளிக்கர்க்கநாமமதி
னெஞ்சலில்புகழ்கூரப்புரமதன்கணீர்ம்புனர்க்கர்க்கவான்குண்ட
மஞ்சனமிடற்றானருளினனினைந்தேனுழ்புனற்காவிரிநாட்டிற்
பிஞ்சுமாமதிதோய்சுந்தராசலத்திற்பிரமநற்றீர்த்தமொன்றுளதால். (க0)

அப்பெருந்தீர்த்தந்தங்கியந்திசையினலர்கதிர்த்தீர்த்தமொன்றுளதா
லிப்பெரும்புவனமுழுவதும்போற்றுமியல்பினதத்தடதீரத்
தொப்பருமுவப்பான்மூன்றுநாள்வதிந்தேனுற்றதோரதிசயங்கண்டேன்
கைப்பறுமனத்தாயன்னதுபுகல்வேன்காதலாற்கேண்மதியென்றான் (கக)

---

* 'பிராகையின்' என்று பிரதிபேதம்.

தாளதாமரையின்*வனமுலை த்தெற்றித்தடஞ்சினைவருக்கைமேற்ருவி
நாளிகேரத்தின் முப்புடைக்குடக்காய்நளிர்புனல்வீழ்ந்துகப்புடைத்து
வாளைபாய்ந்துழக்கும்வைகையந்துறைவன்வளங்கெழுவிசாலைமாநகரான்
கோளுலாமாளியனையதிண்டிறலான்கோவிதாரத்வசனென்போன். (கஉ)

வளவர்தம்பெருமான்றன்னொடும்பொருதுவாகைகொண்டவன்மணித்
களபவாசனைதோய்தாதகிமாலைகவர்ந்துதன்கயனெடுங்கொடியி[தோளிற்
னுளமகிழ்வெய்தவெழுதிமேலுயர்த்தேயொன்னலர்க்கடந்துவாழ்நாளிற்
றளவவாணகையாள்பாகனேயனையதமிழ்முனியவன்மருங்குற்ருன். (கங)

மேலைநாட்புரிந்ததீவினையுருப்பமெய்த்தவன்றனக்குபசார
மாலைவேலுழவனிழைத்திலனுகிமதித்திடாதிருத்தலைநோக்கி
நீலமாக்கடலையருந்தியோன்றன்பானின்றமாணுக்கனைநோக்கி
யாலமேயனையசெயலுடையிவனையழன்றுநீவைதியென்றறைந்தான். (கச)

கும்பமாமுனிவனுணையாலவனுங்கொதித்துடனெதிர்ந்துவெய்துயிர்த்து
வெம்பிநின்னுடலமுழுவதுங்குட்டவியாதியிற்குளித்தியென்றுரைத்தா
னிம்பமாலிகையோனநெடுக்குற்றுநின்றனனிற்றலும்விரைவி
னிம்பரார்நகைத்துக்கண்புதைத்தகலவெய்தியதப்பிணிமாதோ. (கரு)

தேசுடைப்பசும்பொனொளிதவிர்ந்தன்னேன்றிவ்வியவுருவமுங்கருகி
மாசுடைத்தொழுநோய்வலியினலமுங்கிமனந்தளர்ந்திரங்கிமாழாந்து
நேசமுந்திறலுமுலகெலாஞ்செலுத்துநிகரில்செங்கோலும்வெண்குடையு
நாசமாயினவாற்சிறுவருமின்ருனன்றநன்றூழ்வினையென்ருன். (கசு)

விரிதலைப்பசும்பொனுலகொருங்காளும்வேந்தனும்வேற்றுருவடைந்தான்
குரைகடன்முழுதாணிருபரிலொருவன்கொலைத்தொழிற்புலையனேயானு
வரையினையெடுத்தவிலங்கையரிறையுமவுலிபத்திழந்துமாய்ந்தனனுற[ன்
பெரியவர்தம்மையவமதித்தொழுகும்பேதையர்†ருயர்தன்மற்றுளதோ. ()

சிறியவர்பிழைந்தல்பொறுத்திடல்பெரியோர்செய்தியென்பதுதிண்ணமா
லுறுதவனவனைக்குறுகிநாம்வணங்கியுய்வகைபுரிதியென்றிரப்பின் [மா
மறைவலானவனேவீங்குமிப்பிணிக்குமாற்றுமின்றுரைப்பனென்றடுத்து
நறுமலர்தூவியடிபணிந்திடலுநற்றவன்றண்ணளிசுரந்தே. (கஅ)

பொன்னிமாநதிக்குத்தென்கரையதன்கட்பொருந்தியசுந்தராசலத்திற்
றுன்னியசோதிக்கதிரவன்றீர்த்தந்துலங்கியதத்தடமதனின்
மன்னிநீமூழ்கியிறைவனைப்போற்றின்மாசெலாந்தவிர்ந்துறுநோயு
நின்னைவிட்டகலுமேனியும்பசும்பொனிறமுமுன்போல்வருமன்றே. (ககூ)

* 'வனமலைதமெத்தெற்றி' என்று பிரதிபேதம்.
† 'உய்தல்' என்று பிரதிபேதம்.

ஏன்றவனியம்பவரசனும்வணங்கியேக்தலைவிடைகொண்டவ்வாறு
சென்றனனிரவிதீர்த்தநீர்ப்படிந்துசிறப்பானருளினைப்போற்றி
நின்றனனிற்பநிருமலனருளினின்னுடைமாசெலாந்தவிர்த்தேம்
பொன்றுதலிகந்தகாஞ்சனமென்னப்பொலிகநின்னுடலெனப்புகன்றான்.

நம்பிரான்புகலுமக்கணமன்னேன் சார்ந்தவன்பிணியெலாநீங்கி
யும்பரார்போற்றுமுருவமாங்கெய்தியுய்ந்தனனத்தலம்போல
விம்பர்மீதுளதோவிரவிபுட்கரிணியென்னவோர்தீர்த்தம்வேறுளதோ
நம்பனூர்கருணையளவையாருரைப்பார்நான்முகற்குஞ்சொலவரிதால். ()

இன்னணந்தெய்வத்துதிதுதித்திரவிநீர்ம்புனற்றீர்த்தமாக்காதை
சன்னிகர்தவத்துக்காலவற்குரைத்தான்சாந்தமூரற்முனிவரனும்
பின்னலஞ்சடிலத்திறையவனருளின்பெற்றியைநினைந்தகமலர்ந்தான்
பன்னுமிச்சரிதங்கேட்பினுமந்நீர்ப்படிந்துளோர்பலன்பெறுகுவரால். (உஉ)

கோவிதாரத்துவசச்சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—அளO.

---

## இருபதாவது

## பிரமதேவர் நாரதர்க்குத் தலவிசிட்டமுரைத்த சருக்கம்.

---

வேறு.

பண்டைச்சதுமறையோரிசைபயினாரதமுனிவற்
கண்டர்க்கிறைநல்லூரியலயனோதியசரிதங்
கொண்டிப்பொழுதுரைசெய்கெனக்கோதந்தவிர்சூதன்
றுண்டப்பிறைமுடியானடிதொழுதன்பொடுசொல்வான். (க)

விண்ணம்புவிமுதலெங்கணுமேவுந்தவமுனிவ
னண்ணுந்தலநதியாதியநாடித்தொழுதாடி
யெண்ணந்தருமிறம்பூதொன்றுகண்டீதெனத்தேர்வான்
றண்ணங்கமலத்தோனடிசார்ந்தானெறிசேர்ந்தான். (உ)

வீணைத்தவமுனிவேதியன்வேரிக்கமலத்தாள்
யாணர்க்கொழுமலர்தூவியிறைஞ்சிப்புகழேத்திச்
சேணிற்பொலிபொன்னிக்கரைத்தென்பாங்கரின்வரையொன்
றுணிக்கனகச்சோதியதாகிப்பொலிதருமால். (ங)

ஆதன்மீமெதாருலிங்கஞ்சுவையமுதத்துருவாகி
விதமைந்துடைநிறமொன்றிவிளங்கித்தனிவைகும்
புதுவேரிமணக்குந்தெளிபுனல்வாவியுமொன்று
முதுவானவவுளதாலதின்மூழ்கிச்சிலதூயோர். (௪)

மன்னுஞ்சிவக்குறியொன்றினைவலம்வந்திசைபாடித்
துன்னும்படிவத்தோடுதுறக்கம்புகுகின்றூர்
பொன்னங்கமலத்தோயிறும்பூதங்கதுபுகல்வா
யென்னும்பொழுதவனப்பதியியல்கேளெனவிசைப்பான். (௫)

விம்மாவிகல்புரியாவரும்விறல்வாட்படையவுணர்
தம்மோடமர்மலைத்தேவலிசாய்ந்தோடியவானோ
ரெம்மாதிரமும்போயெமையெய்திக்குறையிரப்ப
வம்மாமுடியிமையோரொடுமரிதன்னுலகடைந்தேம் (௬)

வேறு.

நஞ்சராவணையிற்றீம்பானளிகடனுப்பணீடும்
விஞ்சுபேருலகமீன்றமேதகுநாபியோடுந்
தஞ்சம்யாவர்க்குமாகுந்தாளுங்கைத்தலமுங்கண்ணுங்
கஞ்சநாட்போதுபூத்தகருங்கடறன்னைக்கண்டேம். (௭)

காண்டலும்வணங்கிப்போற்றிக்கரகமலங்கள்கூப்பி
வேண்டியா*நிற்குமேல்லைவெள்வளையேந்துமாய
னீண்டுவந்தடுத்ததென்கொலிமையவர்யாருமென்று
மூண்டவான்கருணைதன்னுன்மொழிந்தனன்மொழிதலோடும் ௮)

வண்ணவான்பவளச்செவ்வாய்வார்கடல்வயிறுவாய்த்த
பெண்ணமுதுகந்தமாயன்பேருண்முகத்தைநோக்கி
விண்ணவர்குழாங்களெல்லாம்வெய்யகாரவுணர்போரிற்
றண்ணெனவுடைந்தார்வெல்லுஞ்சூழ்ச்சிநீசொல்வாயென்றேம்.()

நிலம்புகழ்பொன்னித்தென்பானீள்வளங்கனிந்துமல்கும்
வலஞ்சுழியதற்குக்கன்னிவான்றிசைமருங்கினூக
நலந்தருகாசியென்றோர்நற்றலமதன்கணுற்றோர்
சிலம்புளதாகுங்கேண்மின்றெக்கிணகயிலையென்றே ச0)

காசியேயனைத்துநல்குங்கயிலையுமவணேயாகிற்
பேசுவதெவன்கொலெல்லாப்பேறுநீர்பெறுதற்கண்ண
மாசினேயெவர்க்குந்தீர்க்கும்வகையினுலெங்கோனுங்குத்
தேசுடையிலிங்கமாகிச்சேர்ந்தினிதுறைவனன்றே. (௧௧

---

* 'நிற்குமெல்லை' என்று பிரதிபேதம்.

பூரணகாலத்திறுங்குவைகுமன்னுயிர்கட்கெல்லாம்
பிரணவமனுவையயன்பெற்றியினுபதேசிப்பன்
றிரமதாவாகையாலேசெய்தவர்பலருமந்தப்
புரமதிலுற்றுவாழ்வர்புகலுவதினிமற்றுண்டோ. (கஉ)

வெய்யபோரிரணியன்றன்வெற்றியைவேண்டியாமங்
கையனைவணங்கிப்போற்றியாற்றல்பெற்றவனேவேன்றே
மூப்புமாறும்பர்நீருமொருங்குகாவிரியின்மூழ்கித்
துய்யவத்தலத்தின்மேவித்தோன்றலையருச்சித்தேத்தி. (கங)

மும்முறைவலங்கொண்டையன்முளரியங்கீழல்சேவித்துச்
செம்மையினந்திமுன்னர்ச்சேர்ந்தெழுத்தைந்துமோதி
னும்மனத்துவந்தவெல்லாநொடிவரையடைவிரென்ன
வெம்மையின்றெடுத்தோன்கூறியினையனபிறவுஞ்சொற்றான். (கச)

வாகையுந்திருவும்வேண்டின்மாயாபீசத்தினோடு
மோகைகூர்வசியம்வேண்டினுறுங்காமபீசத்தோடு
மோகந்தீர்விஞ்சைவேண்டின்மொழியும்வாங்மயபீசத்தோ
டேகமானதரேயாகியியம்புமைந்தெழுத்தையென்றான். (கரு)

என்றவன்பகரயாமுமிமையவரோடுமீண்டு
நன்றறிபுலவிர்நல்லூர்நாதனைவணங்கியேத்திக்
குன்றெனத்திரண்டதிண்டோட்கொலைத்தொழிலவுணர்தம்மை
வென்றுநீர்வாழ்திமரன்றேம்விண்ணவர்விடைகொண்டாரால். ()

மணமலிசோலைசூழ்ந்தவளங்கெழுநல்லூரெய்திக்
கணமலைபரசன்பாவைகணவனைத்தொழுதுபோற்றி
யிணைபெறியிமையோரெல்லாமீண்டுமோரவுணர்தம்மை
நிணமலிபடையால்வென்றுநிகரிலாச்செல்வமுற்றார். (கஎ)

இன்னனதிறங்களெல்லாமெய்துமத்தலத்தின்மேன்மை
முன்னவனன்றியாரேமொழிவரத்தலத்தினங்கண்
மன்னியதீர்த்தமாடிவள்ளலைவணங்குமாந்தர்
பொன்னுலகெய்துமாறுபுதுமைத்தோபுகழ்மைத்தன்றால். (கஅ)

மலர்மிசையுறைவோனேந்துமகதியாழ்முனிவற்கிவ்வா
றலர்தருகருணைதன்னலடைவுறப்பகர்ந்தானன்னோன்
றலமுழுதளித்தோன்செய்யசரணபங்கயங்கள்போற்றி
யிலவவாயுமைபாள்பங்கனின்னருள்வியந்துசென்றான். (கக)

படித்தலவிச்சரிதந்தன்னைப்பகர்ந்துளோரிருந்துகேட்டோ
* ரெடுத்தபேரன்பினுலேயேட்டினில்வரைதல்செய்வோர்
கொடைத்திறலரசராகிக்குவலயமுழுதுங்காத்துச்
சுடர்ப்படைக்குலிசன்போலத்துறக்கநாடாள்வரன்றே. (உ0)

பிரமதேவர் நாரதர்க்குத் தலவிசிட்டமுரைத்த சருக்கம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-அகூ0.

---

இருத்தோன்றுவது

## மாயவனருச்சனைச் சருக்கம்.

---

வேறு.

வேதன்றனையருண்மலர்நாபியனடல்விறல்கூருங்
கோதந்தருமிரணியனைப்பொருது†குமைத்தெற்ற
நாதன்பதமலர்பரவுஞ்‡சரிதநவில்கென்னச்
சூதன்படிமையர்மகிழும்படியதுசொல்கின்றான். (க)

கடல்சுற்றியநிலவலயமுழமலர்கற்பகநாடு
முடன்மொய்த்தடிதொழவமரிற்பகைஞருடைந்தோடச்
சுடர்விட்டெறிமணிமவுலிக்கடவுளர்தொழநாளு
மடல்பெற்றிகல்புரியிரணியனென்றோரசுரேசன். (உ)

மறையிற்புகலருமனுவெத்துணையுமறந்தேதகப்
பறையிற்றனதுயர்நாமமதொன்றேபகர்கென்ன
முறையிட்டறநெறியின்றிக்குவலயமூன்றுந்தாந்
திறையிட்டலம்வரநெடிதுகொடுங்கோல்செயுநாளில். (ஙு)

வேறு.

நிரந்தரமவுணர்தம்மானிலைதளர்ந்திடுக்கணெய்திப்
புரந்தரன்முதலதேவர்புலம்பிநொந்திரங்கியேங்கி
யரந்தைவேரகழ்ந்துபோக்கியஞ்சலென்றுலகங்காக்கும்
வரந்தருமாயன்முன்னர்வந்தனர்வருதலோடும். (ச)

---

* 'அடுத்தபேரன்பினுலேயலேகத்தில்வரைதல்செய்வோர்' என்று பிரதிபேதம்.

† 'குமைத்தேற' என்று பிரதிபேதம்.

‡ 'சரதம்' என்று பிரதிபேதம்.

செங்கண்மாலருளினோக்கி* த்தேவரைவருகவென்று
விங்குநீர்வந்ததென்கொலியம்புமினென்றுகூற
வங்கண்வானுலகமாதியுலகங்களனைத்துமாலம் [ன். (ரு)
பொங்கிநீடெழுந்தாலென்னப்பொருதிரணியன்கைக்கொண்டா

வெய்யபோரவுணனுமமல்லதுவேறுநாங்க
ளையவோதுதலுக்கஞ்சியலம்வந்துதிரிந்தோமென்றார்
பையராவணையிற்றுஞ்சும்பண்ணவவெண்ணில்கால
நையுமாறவன்செய்தீமைநாவினைவிலற்பாற்றே. (சு)

விண்ணுலகிழந்துநாங்கண்மெலிந்திடுமிடும்பைதீர
வண்ணலங்கலுழப்பாகவருள்சுரந்தளிக்கவென்னப்
பண்ணவர்மவுலிசாய்த்துப்பதயுகம்வணங்கிப்போற்ற
வண்ணப்பூந்துளபத்தாமன்வாய்மலர்ந்தினையசொன்னான். (எ)

பரசிவனருளினாலேபண்ணவர்கேண்மினின்னே
நரசிங்கரூபமெய்திநாமவன்றன்னைவீட்டி
விரைசெறிதருவினீழன்மேவிநீர்மெலிவொன்றின்றி
யரசுவீற்றிருக்கும்வண்ணமருளுதுமஞ்சலென்றான். (அ)

என்றலுமிமையோரெல்லாமிணையடிக்கமலம்போற்றி
மன்றலந்துளபத்தண்டார்மாயனைவணங்கிச்சென்றார்
பொன்றிகழாகத்தானும்புராந்தகனருளினாலே
வென்றிகொண்டிடுவனென்றுவிளங்குநல்லூரில்வந்தான். (கூ)

வந்தமால்பிரமதீர்த்தவண்புனலதனின்மூழ்கிச்
சுந்தரேசனைவந்தித்துச்சுருதிநூல்சொன்னவாற்றாற்
புந்தியின்மகிழ்ச்சிபொங்கப்பூசனைத்தேவயாண்டி
லந்தமில்பத்துநூறாண்டருச்சனைபுரிந்தான்மன்னோ. (க0)

அருச்சனைபுரியுங்காலையங்கணன்விடைமேற்றோன்ற
வரிச்சிறைத்தும்பிபாடும்வண்டுழாய்முகுந்தனோக்கிப்
பொருப்புவிற்குழைத்துவெய்யபுரம்பொடித்துலகங்காத்த
மருப்பொலிகொன்றைவேணிவானவபோற்றியென்றே. (கக)

செய்யபூங்கமலத்தாள்கள்சென்னியால்வணங்கிநிற்ப
வையனுமின்றுநீசெய்யருச்சனைக்குகந்தோம்வேண்டுந்
துய்யநல்வரங்கள்கேண்மோவென்றலுஞ்சுருதிபோற்று
மெய்யநின்னன்பேயல்லால்வேண்டுவபிறிதுமுண்டோ. (கஉ)

* 'அருளிநோக்கி' என்று பிரதிபேதம்.

ஆயினுமண்டவாணர்க்கருந்துயரியற்றுநிற்குந்
தீயினும்வெய்யவெம்போர்த்*திறவிரணியனைவெல்ல
நாயகநமியேற்காற்றனரசிங்கருபநல்கி
யேயுநீளுகிர்வாளாகவின்றுதந்தருளல்வேண்டும். (கங)

மிக்கவித்தீர்த்தநாமமேதினியோர்களெல்லாஞ்
சக்கரதீர்த்தமென்றேசாற்றுதல்வேண்டுமீண்டு
மிக்குளப்புனலின்மூழ்கியெந்தையைத்தமியேன்றன்னைத்
தொக்கவன்பொடுசேவித்தோர்துயர்களைந்திடுதல்வேண்டும். (கச)

என்றலுஞ்செங்கண்மாயனியம்பியவரங்களெல்லாங்
குன்றவிற்குழைத்தபெம்மான்குறைவிலாமகிழ்ச்சிபூத்து
நன்றுநன்றீன்றுநல்கிநலங்கெழுமிலிங்கத்தூடு
சென்றனன்பரனைப்போற்றித்திகிரிமாயவனுஞ்சென்றான். (கரு)

சீற்றமுற்றெழுந்துவெய்யதீத்தொழிலவுணர்தம்மை
யாற்றல்சாலிரணியப்பேரசுரனையமரினேற்றுக்
கூற்றெனவுரைக்குமாறுகூருகிரதனாற்கொன்று
ஞாற்றிசைப்புவியுளோருநலிவுதீர்த்தின்பமுற்றார். (கசு)

வலம்புரித்தடக்கைமாலும்வளங்கெழுநல்லூர்தன்னிற்
பொலங்குழைபாகனுர்க்குப்பொருந்துமேற்றிசையினங்க
ணலங்கொளும்விமானந்தன்னினரசிங்கருபமாகிப்
பலங்கொடுத்துறைவனுளும்பச்சிமமுகமாயன்றே. (கஎ)

நச்சியாதரவாலந்தநரசிங்கமூர்த்திதன்னை
நிச்சமுமனத்திலெண்ணுநெறியுடையாளரெல்லா
மச்சமொன்றுமின்றியளவிலாவாற்றலெய்தி
முச்சகத்தவரும்போற்றமுறையுளிவாழ்வர்மாதோ. (கஅ)

துன்னியவிடபமாதச்சுக்கிலபக்கந்தன்னின்
மன்னியபன்னொன்கென்னவகுத்திடுந்திதியின்மாந்து
மன்னமதொழித்திராவினமலனையாழிமாலை
நன்னயங்கொடுசேவித்தோர்நற்கதிசேர்வரன்றே. (கக)

உரைத்தவிச்சரிதந்தன்னையுள்ளுவந்தினிதுகேட்போர்
வரித்துளோர்படிக்குநல்லோர்வாகைவேலரசராகித்
தரைத்தலமுழுதுங்காத்துத்தம்மனத்தச்சந்தீர்ந்து
மருப்பொலிகோதைபாகன்மலரடிநீழல்சேர்வார். (உ0)

மாயவனருச்சனைச்சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கக0.

---

* 'திறவிரணியனை' என்றும் 'திரவிரணியனை' என்றும் பிரதிபேதம்.

# இருபத்திரண்டாவது
# தேவர்களருச்சனைச் சருக்கம்.

---

வேறு.

மைந்துடையவுணர்கொடுஞ்சமர்க்கிசைந்துமாலவனேவலாலந்த
விந்திரன்முதலவானவரெல்லாமிறைவனையமுதத்திருநாட்டிச்
சிந்தனைமகிழ்ந்துபூசனைபுரிந்தசெயலினைவிரித்துரையென்ன
வந்தமிலுவகைபூத்தருட்சூதனப்பெருங்காதைசொல்லுவானால். (க)

கொந்தவிழ்த்தலர்மந்தாரநாண்மலர்களின்கொய்தனரொருவழித்தொகுத்து
மந்தரப்பொருப்புப்பாற்கடனடுவண்மத்தெனநிறுவிவாசுகியைச் [ணர்ந்த
சந்திரனெடுந்தூணதனொடுங்கொழுவித்தடங்கையார்கடைந்தனர்கொ
வந்தமிலமுதகடம்பலவேந்தியணிபொன்னிக்கரைவயினுற்றார். (உ)

உற்றவர்பொன்னிமாநதியாடியுகந்தசக்கரதீர்த்தத்திற்
பெற்றியின்மூழ்கித்தென்கயிலாயப்பிறங்கலைக்காசிமாநகரை
மற்றவர்நோக்கிவளமெலாங்கண்டுமனத்திடையதிசயமல்கிப்
புற்றரவணிந்தநம்பனைப்போற்றிப்பூசனைபுரிவதற்கமைந்தார். (ங)

சதுமறைதொகுத்தவிதியினாலமரர்தற்பரன்றாளிணைபோற்றி *
விதுவினிற்பொழியுநிலவெனக்கடத்தின்மேவுபுத்தமுதினாலாட்டி
மதுமலர்சிதறிவந்தனைபுரிந்தேவரன்முறைவழாதருச்சித்துப்
பதுமவாண்முகத்தினுமையையுமிறைஞ்சிப்பாங்கினினந்திமுன்னெய்தி. ()

நாரணன்பகர்ந்தவாறெழுத்தைந்துநவின்றனராயிரம்பருவந்
தாரணிமவுலியிமையவருறைந்தார்தாணுவுமாங்கதற்குவந்தே
யாரணம்பழிச்சவிடையின்மேற்றோன்றியன்னவர்காண்வரநின்றான்
கூரணிசுடர்வாட்† குலிசனேமுதலோர்குறுகினர்வணங்கியேத்தெடுத்தார்

மங்கைபங்குடையவள்ளலேவாழிவண்ணமைந்துடையனேவாழி
கங்கையஞ்சடிலத்தண்ணலேவாழிகண்ணுதற்கடவுளேவாழி
யங்கையினெல்லிக்கனிபிடையமுதாயடியவர்க்கெளிவந்தாய்வாழி
துங்கவெள்விடையின்பாகனேவாழிசுந்தரநாதனேவாழி. (சு)

காலனைக்காய்ந்தகாலனேவாழிகடம்பனையீன்றவாவாழி
யாலமுண்டிருண்டகண்டனேவாழியாலமர்செல்வனேவாழி
பாலனுக்கொருபாலாழிதந்தருளும்பரமனேவாழிமுத்தலைய
சூலவேலேந்துமமலனேவாழிசுந்தரநாதனேவாழி. (எ)

---

* 'தாளிணைப்போற்றி' என்று பிரதிபேதம்.
† 'குலிசனைமுதலோர்' என்று பிரதிபேதம்.

இன்னன துதிகளெடுத்தெடுத்தேத்தி* யிமையவரிறைஞ்சினர்நிற்பப் [வி
பொன்னெடுஞ்சிகரங்குழைத்தகைத்தலத்துப்புனிதனுங்கருணைபூத்தரு
யுன்னியவரங்கள்வேண்டுவகேண்மினும்பர்காளெனவுரைசெயலு
மன்னவர்நின்பாற்பத்திமையன்றியளியம்யாங்குறிப்பதொன்றுளதோ. (அ)

வேண்டுவததுவேயாயினுமையவெய்யகாரவுணரைவீட்ட
மூண்டெழுந்திண்டோண்மதவலிவேண்டுமுன்னம்யாமாட்டுமின்னமுத
மீண்டலிற்பிரமதீர்த்தமிப்புவிமேலின்னமுதத்தடமென்றே
யாண்டகைவிளங்கவேண்டுநின்பெயருமமுதலிங்கமெனவேண்டும். (௯)

இத்தகைவரங்கள்வேண்டுமென்றமரரிணையடிவணங்கினரிசைப்ப
முத்தலைச்சூலமேந்துமெங்கோனுமுறைமையாலாங்கவர்க்குதவி
வித்தகவிலிங்கத்தூடுசென்றுறைந்தான்விடைகொண்டுவிண்ணவரவுணர்
கொத்தெலாமறுத்துநாழிலாட்டயர்ந்துகுறைவிலாவின்பமுற்றிருந்தார்.

விண்ணவர்தமக்குவிசயநல்குதலால்விசயநாயகனெனப்புவிமே
லண்ணல்பேர்பெற்றானுரைத்தவிக்காதையன்பினேலோதுவோர்கேட்போ
நண்ணலார்சாயனாட்பிடைப்பொருதுநனந்தலைப்புலகெலாம்பரவ [ர்
வெண்ணரும்விசயமெய்திவீற்றிருந்தேயிமையவர்க்கதிபராகுவரே. (௧௧)

தேவர்களருச்சனைச்சருக்கம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-௯௨௧.



## இருபத்துமூன்றாவது
## பிரமதேவர் நாரதர்க்குத் தீர்த்தமான்மியமுரைத்த சருக்கம்.

வேறு.

வளிநடவரினும்பாடுமகதியாழ்முனிவன்கேட்ப
களினநாண்மலரின்வைகுநான்முகத்தொருவன்சொற்ற
தெளிபுனற்றீர்த்தமேன்மைசெப்புகென்றரவோர்கூற †
வளிபெறுகுதனவ்வாறருந்தவர்க்கியம்புகின்றான். (௧)

எண்டிசைவளாகத்துள்ளவீர்ம்புனற்றீர்த்தமாடித்
துண்டவெண்மதியந்தோயுஞ்சுந்தரகிரியின்வைகி
விண்டிடலரிதாமன்பின்மீண்டநாரதற்குப்பின்னு
முண்டகன்றீர்த்தமேன்மைமுகமலர்ந்துரைசெய்வானால். (௨)

---

* ‘அடுத்தடுத்தோதி’ என்று பிரதிபேதம்.

† ‘அறவோர்கூற’ என்று பிரதிபேதம்.

திரைமிசையலகிலாததண்புனற்றீர்த்தம்யாவு
மொருமையின்மூழ்கித்தம்பாலுற்றமாசொழிப்பானெண்ணிப்
பிரமதீர்த்தத்தினெய்திப்பிறங்குமொவ்வொருகூறென்றுந்
பரமனேயலதத்தீர்த்தப்பான்மையாருரைக்கவல்லார். (௩)

குணதிசையதிற்பிராகைசோதிறென்றிசையினங்கண்
மணமலிகயைவடக்கின்வார்புனற்கங்கைமேல்பாற்
றணவுதலிகந்தமேன்மைதருமணிகன்னிகைப்பே
ரிணையின்மெய்த்தீர்த்தந்தென்கீழிடவயிற்றேவதீர்த்தம். (௪)

நிருதியினாகதீர்த்தநிலவுமாருதவான்றிக்கிற்
பொருவிலாஞானதீர்த்தம்போற்றுமீசானதிக்கின்
மருவுமானதநற்றீர்த்தம்வாசவனங்கிநாப்பண்
கருதியவிருக்குவேதக்கவின்பெறுதீர்த்தமாமால். (௫)

அந்தகனிருதிநாப்பணணியசுர்வேததீர்த்த
நந்தலில்வருணன்வாயுநாப்பணிற்சாமதீர்த்தஞ்
சந்திரமௌலிநண்பன்சாற்றுமீசானனாப்பண்
சிந்தைசெயதர்வணப்பேர்சிறந்தமெய்த்தீர்த்தமாமால். (௬)

ஏனையகோணத்தின்கணீர்ம்புனனதிகளாதி
யூனமிறீர்த்தநாப்பணொலிபுனற்பிரமதீர்த்த
மானசக்கரநற்றீர்த்தமதன்வயினுபவீதத்தின்
மானமொவ்வொருமெய்த்தீர்த்தமற்றவைக்களவையின்றே. (௭)

சொல்லுமித்தீர்த்தகோடிதோய்ந்துளோர்தொடர்ந்துநீங்காப்
பல்பெரும்பிறந்தையாற்றும்பாவவேரகழ்ந்துபோக்கி
மல்லலம்புவனத்தின்கண்மன்னவராகிவைகிச்
செல்லுநற்கதியிற்சேர்வர்தேவரும்பரவமாதோ. (௮)

திங்கண்முந்நான்குந்தூயதிவ்வியபிரமதீர்த்தத்
தங்கணூற்றுடனன்றலணிமணிகன்னிகைக்கட்
பங்கமிலுச்சிவேளைபடிதனன்றிரண்டாம்வேதப்
பொங்குநற்றீர்த்தத்தாணிப்பொருந்துகேட்டையின்கணன்றால்

ஆடிப்பூராடந்தன்னிலருட்பெறன்னாளைதீர்த்த
நாடிச்சென்றாடிலுண்மைஞானமுண்டாங்கங்கைக்கட்
டேடிச்சென்றரிமாதத்திற்றிளைத்துக்கந்தரத்தின்காறு
நீடற்பூம்புனலுளாழநின்றையன்றனைநினைந்தே. (௧௦)

எழுத்தைஞ்னூறிரட்டியோதியெண்ணுபுமாதாந்தத்திற்
றெழத்தருமரபாலெய்திச்சுந்தரேசனைக்கண்ணுற்றூற்
குழைப்புறத்துருவும்வேற்கட்கொம்பொடுங்குழகன்கூறூத்
தழைத்தருள்பூத்துவேண்டுந்தகையனநல்குமன்றே. (கக)

கன்னிமாதத்திற்றூயகங்கையின்மூழ்கிடன்பான்
மன்னியசோமன்வெய்யோன்மருங்குசேர்திதியினங்கட்
டுன்னுதென்புலத்துளோர்க்குச்சொற்றவாபிண்டநல்கி
னன்னவர்பூரித்தோராண்டகமகிழ்தருவரன்றே. (கஉ)

தங்குலத்துள்ளோர்வந்தித்தண்புனற்றீர்த்தந்தன்னு
ளங்கநீர்தோயவெஞ்ஞான்றுடுவரென்னநோக்கிப்
பொங்குநீர்க்கூவந்தன்னிற்பொருந்தித்தென்புலத்தோருற்று
லங்கணுயகனேயல்லால்யாரதன்பெருமைசொல்வார். (கங)

ஐப்பசித்திங்கடன்னிலரும்பெறற்றேவதீர்த்தத்
தொப்பில்காவிரிநற்றீர்த்தத்துண்மையினுடினன்றே
ரெப்பெரும்பவங்களெல்லாமீறுகண்டிறிலாத
செப்புலாமுலையாள்பாகன்சேவடிநீழல்வாழ்வார். (கச)

மிக்ககார்த்திகைமாதத்துமேவுகார்த்திகைநன்னாளிற்
றக்கவைகறையின்முன்னர்ச்சாற்றதர்வணதீர்த்தத்தி
னக்கனைநினைந்துமூழ்கினலியாநோய்கழுதுநண்ணு
தொக்கபாவங்கடீருந்துறக்கமுமெய்தலாமால். (கரு)

மார்கழிமதியினங்கண்மன்னுமாதிரைநன்னாளி
லேர்கெழுசாமதீர்த்தத்திரும்புனல்படிந்துகொன்றைத்
தாரணிசுந்தரேசர்தாள்பணிந்தைந்தெழுத்துஞ்
சீர்கெழுநந்திமுன்னர்ச்செபித்துளோர்பவத்துச்செல்லார். ()

மாசிநற்றிங்கடன்னில்வரும்புனற்பிராகையாடிற்
பாசவேரரிந்துவெய்யபஞ்சபாதகத்திற்றீர்வர்
தேசுலாமுனிவர்தேவர்தென்புலத்தவருமூழ்கி
யீசனைப்போற்றிவேண்டுமின்பமுற்றினிதுவாழ்வார். (கள)

மக்களில்லாதமாந்தர்மக்களைப்பெற்றுவாழ்வார்
மிக்கதேர்கல்வியில்லார்விஞ்சைபெற்றுண்மைதேர்வார்
தொக்கதீப்பிணிகளுற்றோர்சூழ்ந்தநோயனைத்துந்தீர்வார்
கைக்கிருநிதியில்லாதார்கலின்பெறுகுபேரனுவார். (கஅ)

மாசிநன்மகத்திற்கீழ்பான்மன்னியபிராகையாடி
யோசைகூர்சிந்துதீர்த்தத்துவந்தனர்மூழ்கியன்பா
லீசனையேத்திப்பின்னரிந்திரதீர்த்தமாடி
யாசில்வானவனைப்போற்றினம்பொனுடாள்வரன்றே. (௧௯)

அங்கியந்தீர்த்தமாடியத்திசையமலற்போற்றின்
வெங்களிமுதலாயுள்ளவிலக்குதீயுண்டியெல்லா
நுங்கியபாவந்தீர்வர்நோன்மைசேரமதிக்கின்கட்
டங்கியவவமிருத்துத்தவிர்த்திடுந்தீர்த்தந்தன்னில். (௨௦)

ஆடியத்திசையினுற்றவவமிருத்துகரற்போற்றின்
வீடுதலரியவாயவெவ்வவமிருத்துநீங்கு
நீடியநிருதிதீர்த்தநேசித்துமூழ்கியந்தப்
பீடுயர்சிவனைப்போற்றிற்பிஞ்ஞகனருளின்றாலே. (௨௧)

பிறர்மனைநயந்ததீங்குபெயர்ந்திடும்வருணதீர்த்தத்
தறவினையாளர்மூழ்கியத்திசையரனைப்போற்றி
னுறுபிணிமகோதரந்தானெல்லையினீங்கும்வாயுத்
திறனுறுதீர்த்தந்தோய்ந்தத்திசையுறுசிவனைப்போற்றின். (௨௨)

எத்துணைப்பிணியுநீங்குமின்பமுமெளிதிற்சேர்வர்
பத்தியாற்குபேரதீர்த்தம்படிந்தந்தத்திசையெங்கோனைச்
சித்தமின்புறச்சேவித்தோர்செல்வமுற்றின்பமேவி
மொத்தியவினையுநீங்கி * முறையுழியடைவரன்றே (௨௩)

ஈசானதீர்த்தமாடியீசானத்திறைவைப்போற்றின்
மாசானவவிச்சைநீங்கிவரகதிபெற்றுவாழ்வார்
தேசானமீனத்திங்கட்சேர்ந்தவுத்தரநன்னாளி
லேசாதவிருக்குவேதத்தீர்ம்புனற்றீர்த்தமூழ்கின். (௨௪)

குட்டரோகத்திற்றீர்வர்கோதில்வைகாசித்திங்க
ளொட்டியவிசாகந்தன்னிலுரகதீர்த்தத்தின்மூழ்கி
னெட்டுடற்சர்ப்பபீதிநீங்குமற்றதனுன்மாய்ந்தோர்க்
கிட்டமாய்ச்சிராத்தஞ்செய்யினின்பவீடடைவரன்றே. (௨௫)

உரைத்திடுமித்தீர்த்தங்கட்குள்ளமான்மியங்களெல்லாந்
தரைத்தலையூழிகாலஞ்சாற்றினுமுடிவுறாதாற்
குரைத்தலைத்திரைக்குங்கங்கைகுழவிவெண்மதியொடேந்தும்
வரைத்தனுவல்லானல்லால்வகுத்தெவருரைக்கவல்லார். (௨௬)

---

* ‘முனையுளி’ என்று பிரதிபேதம்,

திசைமுகனினையவண்ணந்தீர்த்தமான்மியங்களெல்லாம்
நசைதவிர்மகதிநல்யாழ்மாமுனிக்கோதவன்றே
னசைவிலாவுள்ளத்தோடுமயன்கழல்சென்னிசூடி
யிசைவினான்மகிழ்ந்துபெம்மானின்னருள்வியந்தின்புற்றான். (உ௭)

செப்புமித்தீர்த்தமேன்மைதெரித்தவிச்சரிதஞ்சொல்வோர்
தப்பிலாதெழுதுந்தூயோர்தகுதியாற்கேட்குநல்லோ
ரிப்பெரும்புவியிற்றீர்த்தம்யாவையுமெய்தியாடு
மப்பெரும்பலன்களெய்தியழிவில்வீடடைவரன்றே. (உ௮)

பிரமதேவர் நாரதர்க்குத்தீர்த்தமான்மியமுரைத்த சருக்கம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம்—௯௪௧.



## இருபத்துநான்காவது
## கழுகுமோசனச் சருக்கம்.

வேறு.

பங்கயத்தவிசினிருக்குநான்முகத்தோன்பண்ணமையாழ்முனிகேட்பக்
கங்கமாம்வடிவநீங்கியகாதைகருணையாலுரைத்தவாறெமக்குப்
பொங்கழலனையபுனிதமாதவத்தோய்புகலெனமுனிவரர்வினவ
வங்கணன்பாதந்தொழுதருட்சூதனக்கதைகூறுதலுற்றான். (௧)

மாளவதேசமதன்கணுற்றிருப்போன்மறையெலாந்தெரிந்தமாட்சியினா
னாளுமேவேதநிதியெனப்புவியோர்நவிலுநாமத்தினையுடையோன்
கேளெலாமகிழ்ச்சிபூப்பவெண்வகையகேடில்செல்வத்தினனவன்பால்
வேளெனவனப்புப்பொருந்தியசத்யவிரதனென்றொருவன்வந்துதித்தான்.

அன்னகாதலனுமரும்பெறற்றாதையாயுளினெல்லைகண்டதற்பின்
முன்னவரீட்டுநிதியெலாமுகந்துமுறைபிறழ்விடர்மருளிட்ட
சென்னியர்கூத்தர்க்களித்தவரோடுஞ்சேர்ந்தறநெறியினைநோக்கான்
பின்னலங்கோதைமாதரார்மோகப்பெருக்கினில்வீழ்ந்தழுந்தினனால். (௩)

பிறர்மனைவிழைந்துகுலமின்மாணிழையார்பெண்மையைநயந்துமாழாந்
மறவினைதுறந்துகுலநெறிபிறழ்ந்துமந்தணர்தம்மொடுபகைத்துந் [து
திறனி*லைவகையபாதகமிழைத்துந்திரிந்தனன்றிரிதருமந்நாளின்
மறைவலானொருவன்மாலிடத்தன்புவைத்துளானவனொடும்பகைத்தான்.

---

* 'ஐவகைமாபாதகமிழைத்தும்' என்று பிரதிபேதம்.

பகைத்தனன்றருக்கியிகல்புரிந்தவன்மேற்பற்றியோருழைந்தசை
வீச, மிகைத்தவறில்லான் றூய்மையிறசையைவீழ்த்தலாற் கழுகுருவாகி,
யுகைத்திடுங்குணபஞ்சுவைத்துநீதிரியென் றுருத்தவன்சபித்தலுமன்னோ
ன், றகைத்திடறேற்றான் ரேட்டியங்கூர்வாய்த்தடஞ்சிறைக்கழுகுருவ
டைந்தான். (ரு)

கழுகுருவடைந்துதிசைதொறும்படர்ந்துகளேபரநுகர்ந்துசெல்காலைப்[கி
பழுதுனல்வினையின்பான்மையான்விண்ணும்பறந்துதென்றிசைமுகநோக்
மழுவலானல்லூரெல்லைவந்தடுத்துமறைவலான்றீர்த்தவாவியினோ
ரிழுதுடைமீனினூன்கவர்ந்துண்பானீர்ம்புனற்குத்தியதன்றே. (சு)

குத்தலும்பிரமதீர்த்தநீர்த்திவலைகொடியவெஞ்சிறைக்கழுகதனைப்
பொத்துதல்செய்யக்கணத்தினவ்வுருவம்போயதுதேவனுய்ப்பின்ன
ரெத்திசையவருங்காணநீள்சோதியிலங்குகாளிவிமானத்தினேறி
முத்தகமுரிஞ்சுமாமடமகளிர்முகிண்முலைத்தடத்தின்மூழ்கினனால். (எ)

புல்லியகழுகுந்தேவனுய்வானோர்போற்றவீற்றிருந்ததுவென்று
னல்லிசைவல்லாயுளங்களித்தந்நீர்நாடியேயாடுதல்புரிந்தோ
ரெல்லையில்வினையின்சிமிழ்ப்பெலாமொருவியீறிலாவின்பவீடதனை
யொல்லையினடைதலதிசயமோவென்றோதிமவூர்தியாங்குரைத்தான். (அ)

உரைத்தலுமகிழ்ச்சிபூத்துநாரதனுமொண்ணுதலுமையொருபாக
னருத்திகூர்கருணைக்களவைமற்றுளதோவையனல்லூரினைப்போலத்
தரைத்தலமதன்கட்டலம்பிறிதுண்டோசத்தசாகரத்தடம்போலத் [னால்.
திரைப்புனற்றடம்வேறுளதுகொலென்னாத்திசைமுகற்பணிந்துசென்றன

மொழிந்தவிக்காதையெழுதுநர்கேட்போர்முறைவிரித்தியம்புமேதகவோ
ரழுந்துபாதகங்களனைத்தையுமொருவியகலிடத்தரசுவீற்றிருந்து
தொழுந்தகையமரர்தொழுதனர்போற்றத்துறக்கநாடெய்திவெண்டிங்கட்
கொழுந்தணிமவுலிப்பரம்பரன்பதுமக்குரைகழனீழல்வாழ்ந்திருப்பார். (க0)

கழுகுமோசனச்சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—கூடுகூ.

இருபத்தைந்தாவது

## வீதிவிடங்கச்சருக்கம்.

வேறு.

வானினின்றுவருமருமைத்திரு
மேனியாரருள்வீதிவிடங்கனூர்
நானிலத்துநல்லூர்வைகுமான்மியந்
தானியம்பெனச்சூதனுஞ்சாற்றுவான். (க)

அருந்தவத்தினிராதியுகத்தினிற்
றிருந்துகோலெண்டிசையுஞ்செலுத்தியே
பொருந்தலாரைப்புறங்கண்டரசுசெய்
திருந்துளான்முசுகுந்தனிணையிலான். (உ)

அன்னவேந்தனவணிபுரக்குநா
ளின்னல்செய்யுமசுரரிடுக்கணுற்
பொன்னினாட்டிற்புரந்தரனாதியோர்
துன்னியன்னவற்கின்னணஞ்சொல்லுவார். (௩)

சீற்றமுற்றெழுதீயவவுணரா
லாற்றல்போய்மிகவல்லலுற்றேமெமைப்
போற்றல்செய்துபுரத்தற்குநீயவர்
கூற்றமாகக்குமைத்திடல்வேண்டுமால். (௪)

என்னவிண்ணோரிரத்தலும்வாட்படை
மன்னர்மன்னவன்மற்றிதுவேலது
சொன்னவாறுதொலைத்தசுரேசரைச்
சின்னபின்னஞ்செய்வேனென்றுசென்றனன். (௫)

சென்றுவேந்தனத்தேவர்குழாத்தொடு
நின்றுதானவர்நீள்குலம்யாவையுங்
கொன்றுவிண்ணங்குடியேற்றிவாசவன்
வென்றிசூடவிறல்புரிந்தானரோ. (௬)

மற்புயத்திகல்வாட்படைமன்னனைக்
கற்பகத்திருநாட்டுறைகாவலன்
பொற்புறத்தழுவிப்புகழ்ந்தேத்திநீ
யெற்பதத்தரசின்றுதந்தாயென்றான். (௭)

இன்றுநீசெயுதவிக்கியான்பிறி
தொன்றுகைம்மாறுதவுதலென்கொலாம்
வென்றிவேலவவாயினும்வேண்டுவ
நன்றுகேளதுநல்குவனீங்கென்றான். (௮)

உம்பர்நாயகனிவ்வணமோதலு
மெம்பிரானருளாலிகல்வேந்தனு
மம்பைவேலவனோடு*மமர்ந்தவின்
னம்பனார்தமைநல்கென்றியம்பினான். (௯)

---

* 'அமர்ந்தவிந்நம்பனார்தமை' என்று பிரதிபேதம்.

மன்னன்சொற்றலும்வாசவன்மாலவன்
முன்னநல்கியமூர்த்தியிவரெனப்
பின்னையொன்றுரையான்பெரிதேங்குபு
தன்னையும்மறந்தான்றடுமாறினான். (க0)

கொள்ளுகென்னுமக்கூற்றுடனுருயிர்
விள்ளுமாலெனவிம்மிதமுற்றவன்
றள்ளுமாலுரையென்னுமத்தன்மையால்
வள்ளன்மன்னவன்கொள்ளவழங்கினான். (கக)

வழங்கலோடுமகிதலமன்னவ
னழுந்துமன்பினொடாகம்புளகித்தே
விழுந்துபோற்றிவிமலனைக்கைக்கொண்டு
தொழுந்தகைமகவானைத்துதித்தரோ. (கஉ)

புற்றிடங்கொண்டபூரணனாரண
னற்றந்தீர்த்தன்றரும்பெறன்மாமண
முற்றுருமூலமுண்டகப்பூமகட்
குற்றவாறுசெயூரில்வந்தெய்துவான். (கங)

விண்ணநீங்கிவிரைமலர்ச்சோலைவாய்த்
தண்ணந்தாதுதவழ்பொன்னிநாடெய்திக்
கண்ணகன்றகடிமதில்சூழ்வரு
மண்ணனல்லூரடைந்தனனென்பவே. (கச)

பூவலர்ந்தபுதுமணச்சோலைவான்
காவெனுந்தகைகாட்டவிண்ணாட்டகத்
தேவலிந்திரனெய்தமராபதித்
தேவநன்னகர்போன்றதச்சீர்நகர். (கரு)

அன்னவண்ணமணிவளமல்குபு
துன்னுமந்தநல்லூரெல்லைதோன்றலு
முன்னவன்றினமூன்றிவண்வைகவே
மன்னசெய்கென்றோர்வாணியெழுந்ததால். (கசு)

வாணிவானத்திவ்வண்ணமெழுதலு
மாணிச்செம்பொனவிர்மணிமோலியான்
றாணுவின்னருடானிதுவேலது
பேணிச்செய்குவன்பெற்றியின்யானென்றான். (கஎ)

இந்திரன்செய்சிறப்பினெழுமடங்
கந்தமின்றியவன்புடன்மன்னவன்
சுந்தராசலத்தொன்னகரந்தனி
லெந்தைவீதிவிடங்கர்க்கியற்றினன். (௧௮)

திறல்கொண்மன்னவன்செய்தசிறப்புவந்
திறைவன்பீடூச்திருந்தசைந்தாடின
னறைகொள்பூமலர்நாற்றிக்கும்போர்ப்பவா
னுறையுந்தேவருமுற்றுநின்றாடினர். (௧௯)

அந்தணாளருமறையோசையுந்
தொந்தமாமன்பர்தோத்திரவோசையு
முந்துபல்லியமூண்டெழுமோசையுஞ்
சிந்துவேழுமுன்சேர்ந்தெனவார்த்தவே. (௨0)

ஊறிலாவளமுற்றநல்லூரிலோர்
கூறுநம்பன்குவலயம்போற்றவே
வீறுசித்திரவீதிவிடங்கனென்
றீறில்பேர்பெற்றிருந்தனனென்பவே. (௨௧)

வானநாட்டின்மணிமுடியிக்திரன்
றானமாமமராபதிதன்னினு
ஞானமூர்த்திநல்லூர்கண்டுறைவனே
லேனைவான்பதியாதிதற்கொப்பதே. (௨௨)

மூன்றுநாளவண்முற்றலுங்கோமக
னூன்றுகாதலினேங்குநல்லூர்வயிற்
றோன்றுசோதிச்சுயம்புலிங்கம்பணிந்
தேன்றுவான்பணியாதுமியற்றியே. (௨௩)

கரும்புஞ்செந்நெலுங்காய்க்கமுகும்மிடைந்
தரும்புந்தண்ணடையாதியுமாதிக்கு
விரும்புபூசைக்குவேண்டுவயாவையுஞ்
சுரும்புலாந்தொடையானல்கிச்சூழ்வந்தே. (௨௪)

எந்தைவீதிவிடங்கரையெண்டிசை
வந்துவந்துவழியிடைவந்திப்பக்
கொந்துலாமலரோடுகொழும்பொனுஞ்
சிந்திபாரூர்த்திருநகருப்புந்தனன். (௨௫)

செம்பொற்கோயிலுட்டேவசிங்காதனத்
தும்பர்கோனையுவப்புடன்ருபித்து
நம்பனுக்குநயந்தனயாவையு
மிம்பர்நாடுய்யவேந்தல்செய்தானரோ. (௨௬)

அந்தணருரதற்செய்துங்காலையி
னெந்தைநல்லூரிடத்தமர்ந்தானென்றுந்
சுந்தராசலத்தொல்பதியாவைக்கு
முந்துமாறுமொழியவும்வேண்டுமோ. (௨௭)

சாற்றுமிக்கதைதன்னைப்படித்துளோ
ரேற்றமாகவினிதுடன்கேட்டுளோர்
காற்றிசைப்புவியாண்டுநயப்புடன்
வீற்றிருப்பர்பொன்மேதினிமீதரோ. (௨அ)

வீதிவிடங்கச்சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—கூஅஎ.

---

## இருபத்தாறுவது

## அமர்நீதிநாயனர்சருக்கம்.

---

வேறு.

பார்ந்தளாபரணம்பூண்டபரம்பரன்கருணைதன்றாற்
சாந்தமார்புலிக்கான்மேலோன்றனயன்முன்சாற்றுகின்ற
வேந்தலாரமர்நீதிப்பேரிசைந்துளார்சரிதமிப்பா
லாய்ந்துரையென்னச்சூதனருந்தவர்க்குரைக்கலுற்றான். (க)

பொங்குநீர்ப்பொன்னிநாட்டிற்போதவிழ்த்தளிபண்பாடும்
பங்கயப்பழனவேலிப்பழையாறைப்பதியில்வாழ்வார்
மங்கலமிகுந்தசெல்வவணிகர்தங்குலத்தில்வந்தா
ரங்கணர்க்கன்புமிக்காரமர்நீதியென்னும்பேரார். (௨)

எந்தையாரடியார்க்கென்றுமீறில்பேரன்புதன்றாற்
பந்திபந்திகளாய்வைத்துப்பாங்குடனன்னமிட்டுக்
கந்தைகோவணங்கணீவார்காலினுங்கலத்தினுலும்
வந்திடுநிதிகளுய்த்துவான்கதிப்பயனைக்கொள்வார். (௩)

அண்ணலாரடியாருண்ணவறுசுவையடிசிலீவா
னண்ணுமாதவர்நல்லூரினகரினோர்மடமுண்டாக்கி
யெண்ணிலாச்சுற்றத்தோடுமெந்தைநல்விழவுகாணத்
தண்ணந்தார்வணிகர்கோமான்சார்ந்தவனுறையுங்காலை. * (ச)

அங்கண்மாஞாலமெல்லாமவர்புகழ்விளங்கச்செய்வான்
சங்கரன்பிரமசாரிதன்னுடைக்கோலங்கொண்டு
சிங்கவேறனையார்முன்னஞ்சேர்தலும்வணங்கியெந்தா
யிங்குவேதியராலட்டவின்னமுதருந்திப்பின்னர். (ரு)

அடியனேனுய்யவாட்கொண்டங்கணர்திருநாண்முற்று
மொடிவிலாநேயத்தோடுமுறைந்துபின்னகல்வீரென்ன
நெடியமாலறியாவெங்கோனேர்ந்தனனுவகைபூத்துப்
படிமிசையெவர்நின்போலப்பத்திமைபுரிவரென்றே. (சு)

கரதலத்திருக்குந்தண்டிற்கட்டுகோவணமிரண்டி
லொருதனிக்கோவணத்தையொப்பிலான்கையில்வாங்கி
யிருநிலத்திதனுக்கொப்பதில்லையாலரிதிற்காத்துத்
தருகெனவைத்துமூழ்குந்தன்மையன்போலச்சென்றான். (எ)

சென்றவன்புனலினாடித்திரும்பிவந்தவனைப்போல
நின்றுகோவணத்தைக்கேட்பநிகரிலாவன்பரோடி
யன்றுகோவணங்கொடுத்தவறைபுக்குக்காணாராகி
யின்றிதற்கென்செய்கோவென்றில்லொடுமிரங்கிச்சோர்ந்தார். (அ)

கோவணமொளித்தகள்வர்குரைகழற்சரணம்போற்றிக்
காவல்கொண்டுய்த்தியென்னக்கருணையாலென்கைதந்த
தாவில்கோவணத்தைக்காணேன்றமியனேன்றவறெண்ணாது
பூவணப்பட்டுநூலாற்புனைந்தகோவணங்கொள்கென்றார். (கூ)

என்றலுஞ்சினந்துபெம்மானெரியெழவிழித்துநோக்கி
நின்றவர்தம்மைச்சீறிநிகரில்கோவணங்கள்கொள்வா
னொன்றியவன்பன்போலவுலகினைமருட்டுகின்றாய்
சென்றதுகொணர்தியுன்பொய்ச்சிமிழ்ப்பினிற்படேன்யானென்றா[ன்.

அளவிலாமாயைவல்லவண்ணலிவ்வாறுகூற
வுளநடுக்குற்றுக்கண்ணீரொழுகநெட்டுயிர்த்துப்பின்னுந்
தளவவாணகையாளோடுஞ்சரக்கறைபுகுந்துதேடி
விளையுமாறென்னோவென்னாமீண்டடிவீழ்ந்துசொல்வார். (கக)

* 'சார்ந்தனனுறையுங்காலை' என்று பிரதிபேதம்.

தந்தகோவணத்தைக்காணேன்றமியனேன்பொய்த்ததில்லை
யெந்தைநீபொறுத்திவெவ்வேறண்ணில்கோவணங்களீவேன்
சிந்தனைசெய்யேலென்னத்தீயெழநகைத்துநீகொண்
டுந்துகோவணத்துக்கொப்பதொன்றெமக்கமையுமென்றான். (௧௨)

ஒப்பதிங்குளதேலையவுறுதுலையிடுதிநேராய்
வைப்பன்வேறுள்ளதெல்லாமற்றிஃதுடன்பாடென்னக்
கைப்பதுமற்றிற்கொண்டகவின்கொள்கோவணத்தையன்னோன்
செப்பியவாறேயுய்த்தான்றெருமரலொழிந்துசெல்வர். (௧௩)

திவ்வியவடிவங்கொண்டோன்சேர்த்தகோவணத்துக்கொப்ப
வொவ்வொருகோவணங்கொண்டுய்த்தலுநிறைநில்லாம
லெவ்வமுற்றுயரநாயகரிஃதிறும்பூதென்றெண்ணி
யவ்வியந்தீர்ப்பார்வல்லேயறையிடைப்புகுந்துவாரி. (௧௪)

தூயகோவணத்தின்சும்மைதூசுடைப்பொதிகளிந்த
மாயிருஞாலம்விற்குமணிவிளிம்பெறிந்தவாடை
மேயபூம்பட்டுமிட்டுமேவரக்காணார்பின்னும்
பாயொளிப்பணியும்பொன்னும்பலபண்டத்தொகையுமிட்டார். ()

இடுதலுஞ்சமனில்லாமலெந்தையார்தட்டுத்தாழ
வுடையதோர்பொருண்மற்றின்றியுற்றதம்மனைவியோடு
மடநடைமகாருந்தாமுமகிழ்ந்தனரேறுங்காலை
விடையவர்தட்டினோடுமேவரநின்றதன்றே. (௧௫)

நிற்றலுமேறுந்தட்டேநீடொளிவிமானமாக
வெற்றிமால்விடைமேலேறிவிளங்கிழையொருபால்வைகக்
கற்றையஞ்சடையரன்னோர்கண்களிகூரத்தோன்றி
முற்றுபேரின்பவீடுமுறைமையாலடையச்செய்தார். (௧௭)

ஆதலானல்லூர்மேயவண்ணலாரருளின்றன்மை
யோதுமாறெளிதோயார்க்குமூழிதோறுரைசெய்தாலு
மாதவர்கேண்மினிந்தவண்ணநற்பதியின்மேவிப்
பூதலம்புகழவின்பம்பொருந்தினரனேகர்மாதோ. (௧௮)

கற்றவர்கேட்போரிந்தக்காதையைக்காதல்கூர
முற்றவும்வரைதல்செய்வோர்முதலகாண்டுபின்னர்ப்
பெற்றமீதுயர்த்தபெம்மான்பேரருளதனுமென்று
முற்றபேரின்பவீட்டினுகந்துவீற்றிருப்பரன்றே. (௧௯)

இப்பரிசுகந்துகுதனெம்பிரானருளினாலே
தப்பிலாவிரதம்பூண்டசவுனகன்முதலியோர்க்குச்
செப்பினனவருநல்லூர்த்திருமலைச்சொக்கிபாக
னெப்பருங்கருணைவாழ்த்தியுளங்களித்துவகைபூத்தார். (௨0)

சூதமாதவனைநோக்கித்தொழத்தகுமுனிவரெல்லா
மூதுணர்வியாதன்சொற்றமுறைமையானல்லூர்மேன்மை
யாதரம்பெருகத்தேனுமமிர்தமும்போலச்சொற்றாய்
நீதியாலுணர்ந்தேமெல்லாநின்னையார்நிகர்ப்பரென்றார். (௨க)

வள்ளலாருகந்தநல்லூர்மான்மியமிருந்தவாறுந்
தெள்ளுநீர்த்தீர்த்தம்யாவுஞ்செழித்தவண்சிறந்தவாறு
முள்ளினோர்க்கெங்கோனின்பமுதலியவாறுநோக்கித்
தள்ளருந்தவத்தோரெல்லாந்தமதுடல்பூரித்தாரால். (௨௨)

நறுமலர்ச்சோலைசூழுநல்லூரிலாண்டார்செய்யுந்
திறல்கெழுகருணைவாழ்த்தித்திருமலைச்சொக்கியென்னும்
பிறைநுதலிமயவல்லிபேரருள்வாழ்த்திநாளு
முறுதவருவகைபூத்தாரோங்கியதுலகமெல்லாம். (௨௩)

திருமலைச்சொக்கிவாழிதேகளிவிநாயகன்றன்
மருமலர்த்தாள்கள்வாழிமணவாளக்கோலம்வாழி
வெருவுதறவிர்க்குங்காசிவிநாயகன்முதலோர்வாழி
முருகவேள்வாழிதிவ்யமூர்த்திகளெவரும்வாழி. (௨௪)

அந்தணர்வாழிநல்லூரணிவளம்வாழியோங்குஞ்
சுந்தரசைலம்வாழிசுயம்புநல்லிலிங்கம்வாழி
சந்ததந்தலத்தோர்வாழிதானிகர்முதலோர்வாழி
செந்தமிழ்ப்புராணம்வாழிசெப்பினோர்வாழிவாழி. (௨௫)

திருப்பணிசெய்வோர்வாழிதிருமலைச்சொக்கிபாகர்
மருப்பொலிபாதத்தன்புவைத்துளோர்வாழியென்றும்
விருப்பமீதாரப்பூசைவிழாவொடுபுரிவோர்வாழி
தரைத்தலம்புரக்கும்வேந்தர்சந்ததம்வாழிவாழி. (௨௬)

அமர்நீதிநாயனார்சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—க0௩.



## நல்லூர்ப் புராணம்

முற்றுப்பெற்றது.

